உ

ஓம் சரவணபவ

# பொன்மகள் வாழ்

# சிங்கபுரி



அருள்மிகு வள்ளி தேவசேனா சமேத செல்வ சிங்காரவேலவர்

சிங்கபுரி, குறிஞ்சிப்பாடி.



பத்மாவதி திருமண
மண்டப வளாகத்தில் உள்ள
மாரியம்மன் திருக்கோயில்
குடமுழுக்கு விழாவில்
கும்பாபிஷேக செம்மல்



தேவார கலைமாமணி,
தருமபுரம்
சுவாமிநாதன் அவர்களுடன்
கும்பாபிஷேகச்
சக்ரவர்த்தி

காரைக்குடி,
கோவிலூர் ஆண்டவர்
அதிஷ்டான
குடமுழுக்கு விழாவில்
ஆதீனகர்த்தர்
மெய்யப்ப ஞானதேசிகர்
சுவாமிகளை வேள்விச்
சாலை வழிபாட்டில்
கொ.மு.சிங்காரவேல் அய்யர்



உ

ஓம் சரவணபவ

திருச்சிற்றம்பலம்



குறிஞ்சிப்பாடி,

தெய்வத்திரு **கொ.மு.சிங்காரவேல் அய்யர்**

அவர்களின் பேரனும்

**சி. சரவணன் அய்யர் - பானுமதி** மகனுமாகிய

திருவளர்செல்வன் **S. நித்தியானந்தன்,** M.B.A.,

திருவளர்செல்வி **R. விஜயலட்சுமி,** M.Sc.,

ஆகியோருக்கு **09.09.2015 புதன் கிழமை**

குறிஞ்சிப்பாடி **பத்மாவதி திருமண மண்டபத்தில்**

**நிகழ்ந்த இனிய திருமண நல்விழா மற்றும்**

கும்பாபிஷேகச் சக்ரவர்த்தி,

தெய்வத்திரு. **கொ.மு.சிங்காரவேல் அய்யர்** அவர்களின்

படத்திறப்பு விழா

# அன்பளிப்பு மலர்

சென்றார்கள். எங்களையும் அவர்கள் அன்று ஆட்படுத்திய நிகழ்வே இன்றுவரை அடியேன் வாழ்வியல் நிகழ்ச்சிகளை நடத்துவிப்பதற்கு அடித்தளமாக அமைந்ததெனலாம்.

அவர்கள் கூறியவாறே ஐந்தாம் கால வேள்விக்குத் தாம் மட்டும் வந்து இங்கிருந்த தங்கள் குழுவினர் இருவர் மற்றும் மன்ற அன்பர்களுடன் சிறப்பான முறையில் திருக்குடமுழுக்குப் பெருவிழாவினைத் திருப்பனந்தாள் காசித்திருமடம் அதிபர் திருவளர் திருகாசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திரு முன்னிலையில் செய்வித்துச் சிறப்பித்தார்கள்.

நிகழ்ச்சிகள் இனிதே நிறைவுற்றன. குழுவினர் அறுவர்க்கும் அளிக்கப்பட்ட ஆடையைப் பெற்றுக் கொண்டார்கள். முன்பு ஒப்புக்கொண்ட சன்மானத் தொகை கொடுக்க எடுக்கும்போதே ஒப்புக்கொண்ட தொகை வேண்டாம், நாங்களும் நீங்களும் சேர்ந்துதான் செய்தோம். எனவே, பாதித்தொகை மட்டும் கொடுங்கள் எனக் கூறிவிட்டார்கள். நீங்கள் எங்களுக்கு அளித்தது பெறுதற்கரிய வாய்ப்பு. எனவே, ஒப்புக்கொண்ட தொகையை மறுக்காமல் பெற்றுக் கொள்ளுமாறு கூறியும் ஏற்க மறுத்துவிட்டு பாதித்தொகையை மட்டும் பெற்றுக் கொண்டு அனைவருக்கும் திருநீறணிவித்து வாழ்த்தி விடைபெற்றுச் சென்றார்கள்.

இப்பகுதிக்கு அவர்கள் தனியாக வரும்போது சன்மானத் தொகை ஏதும் பேசிக் கொண்டு வருவதில்லை. உங்கள் விருப்பப்படுவதைக் கொடுங்கள். தான் ஒருவர் வருமானத்தில் 9 பேர் சாப்பிட்டோம். அப்போதும் நன்றாக இருந்தோம். இப்போது 5 பேருக்கு வருமானம் உள்ளது. இப்போதும் நன்றாகவே உள்ளோம் என்பார்கள்.

**ஐயா அவர்களின் சொல்லையும், செயலையும் பற்றி :-**

ஐயா அவர்கள் கோவை பகுதியில் பெரிய தொழிலதிபர் ஒருவரின் குலதெய்வக் கோயில் திருக்குடமுழுக்குப் பெருவிழாவினை நிகழ்த்தி உள்ளார்கள். நிகழ்ச்சி முடிந்ததும் ஐயா

அவர்களை அழைத்து சன்மானம் எவ்வளவு? என்று கேட்க இவர்கள் உங்கள் விருப்பம், கொடுப்பதைக் கொடுங்கள் என்று கூறிவிட்டார்கள். தொழிலதிபர் இவர்கள் முகத்தைக் கூர்ந்து கவனித்துக் கொண்டே ஒரு தொகையைக் கொடுத்துள்ளார். ஐயா அவர்கள் முக மலர்ச்சியுடன் பெற்றுக் கொண்டு விடைபெற்றார்கள். பேரூந்து நிலையத்திற்குச் செல்லத் தங்கள் காரை அனுப்பிவைத்து கார் ஓட்டுநரிடம் காரை மெதுவாக ஓட்டிச்செல் என்று பணித்துள்ளார். கார் மெதுவாகச் செல்கிறது. தொழில் அதிபர் டிரைவருக்குப் போன் செய்து காரில் உள்ளவர்களுடன் காரைத் திருப்பி வருமாறு கூறுகிறார். ஐயா அவர்கள், "ஏன் காரைத் திருப்புகின்றீர்கள்" என்று கேட்க ஏனோ? தெரியவில்லை; முதலாளி திருப்பி அழைத்து வருமாறு கூறுகிறார் என்றார். கார் தொழிலதிபர் இல்லம் செல்கிறது. தொழிலதிபர் ஐயா அவர்களை அழைத்து முன்பு கொடுத்ததைப் போல் மேலும் 5 மடங்கு தொகையை அளிக்க இவர்கள், "முன்புதான் கொடுத்துவிட்டீர்களே" என்று கூற, உங்கள் சொல்லும் செயலும் எவ்வாறு என்பதை அறியவே அச்சிறிய தொகையைக் கொடுத்தேன். தங்கள் முகம் மலர்ச்சியே இரண்டிலும் வேறுபாடு அற்றவர் என்பதை உணர்த்தியது. எனவே, இதையும் பெற்றுக் கொள்ளுங்கள் என வேண்ட பின்னர் அதையும் பெற்றுக் கொண்டார்கள். ஐயா அவர்கள் தொழிலதிபரிடம், நான் கேட்டிருந்தால் முன்பு கொடுத்ததைப் போல் இன்னும் ஒரு மடங்குதான் கேட்டிருப்பேன். ஆனால் நான் கிடைத்ததைக் கொண்டு மகிழ்ச்சியடைந்ததால் தான் முன்னர்க் கொடுத்த தொகையை விட கூடுதலாக 5 மடங்கு கொடுத்துள்ளீர்கள் என்று கூறி விடைபெற்று அதே காரில் பேருந்து நிலையம்வந்து தங்கள் ஊர் திரும்பியுள்ளனர். இப்பகுதியில் நிகழ்ச்சிக்கு அடியேன் ஐயா அவர்களை அழைத்தபோது சன்மானத் தொகை குறித்து கேட்டதற்கு இந்நிகழ்வைக் கூறி அவர்கள் விருப்பம் போல் தருவதை ஏற்றுக் கொள்வோம் என்றார்கள்.

**நகையொளிர் திருமுகம் :**

கம்பர் இராமாயணத்தில் இராமனின் திருமுகத்தைச் சித்திரத்தின் அன்றலர்ந்த செந்தாமரைக்கு ஒப்பிட்டுக் கூறுவார். அதைப்போல் எந்த நிகழ்ச்சிக்குச் சென்றாலும், பல்வேறு சிரமங்கள், நெருக்கடிகள், மிகுந்த சூழ்நிலைகளிலும் அனைவரும் மனங்கொளும் வகையில் நிகழ்ச்சிகளை செய்விப்பது ஐயா அவர்களிடம்இருந்த அருங்குணமாகும்.

**இருப்பதைக் கொண்டு நிறைவாகச் செய்தல் :**

எந்த நிகழ்ச்சிக்குச் சென்றாலும் அவர்கள் கொடுக்கின்ற பொருட்களைக் கொண்டு நிகழ்ச்சியைச் சிறப்புற செய்வித்தல் ஐயாவின் தனிச்சிறப்பாகும். தாங்கள் கொடுத்த பட்டியலில் குறிப்பிட்டுள்ள பொருட்களில் இல்லாத பொருட்களை வாங்கிக் கொண்டு வந்தால் தான் செய்ய முடியும் எனக் கூறும் வழக்கம் தான் தற்போது அதிகம். இந்நிலையிலும் இருப்பதைக் கொண்டு இளையான்குடிமாறநாயனாரின் துணைவியார் நள்ளிரவில் கொட்டும் மழையிலும் இருப்பதைக் கொண்டு அமுதுசெய்து அண்ணலாரை அருந்தச் செய்ததைப்போல் ஐயா அவர்கள் இல்லாததை வாங்கி வாருங்கள் என்று கூறாமல் இருப்பதைக் கொண்டு நிகழ்ச்சிகளைச் சிறப்பாக செய்விப்பது அவர்களின் தனிச்சிறப்பாகும்.

**திரிந்த பழமொழிகளைத் திருத்தமாகக் கூறி உரிய விளக்கமளித்தல் :**

"பந்திக்கு முந்திக்கோ, படைக்கு பிந்திக்கோ" என்ற தொடர் நாம் இன்று வரை பலமுறை காதில் கேட்டுள்ளோம். ஆனால் சரியான தொடர் "பந்திக்கு முந்திக்கை, படைக்கு பிந்திக்கை" என்பதுதான். அதாவது பந்தியில் உணவு உண்ணும்போது முன்கையை உபயோகித்தலையும், போர் புரியும்போது வாள்போன்ற படைக்கருவிகளை ஏந்திய கையை ஓங்கி வீசும்போது அக்கையை தலைக்குமேல் கையைப் பின்பக்கமாக இழுத்து ஓங்கி வீசுதலையும் குறித்து எழுந்ததாகும். ஆனால் எப்படியோ அத்தொடர் மாறிவிட்டது.

அதுபோலவே முத்துவின் தாயார் வெள்ளிக்கிழமை குளித்து நல்லாடை புனைந்து முருகனை வழிபட்டுப். பின் சமாதிக்கு வந்தார். அங்கே சமாதி வெடித்து இரு பிளவாகப் பிரிந்திருந்தது. அப்பிளவினுள் முத்து உயிரோடு படுத்திருந்தார்.



சமாதி வெடித்து இரு பிளவாக பிரிந்து முத்து உயிரோடு படுத்திருந்தார்

தம் பிள்ளை உயிரோடு இருப்பதைக்கண்டு அக மகிழ்ந்தார் அன்னை. ஆவலோடு மகனைத் தூக்கிக்கொண்டு வீடு வந்தார். ஊரிலுள்ளோர் அவ்வரிய காட்சியினைக் கண்டு வியந்தனர். ஆனால் சில தீயவர்கள், இவள் சமாதியிலிருந்த இறந்த குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்துவிட்டாள். இப்பாவக்காரி இனியும் இங்கிருந்தால் இவ்வூர் நாசமாகிவிடும் எனச் சொல்லி, மாது சிரோன்மணியை ஊர் கடத்தினர்.



சுப்பராய சுவாமிகள் கனவில் பழனி முருகன் தோன்றுதல்

ஒருநாள் முருகப்பெருமான் அவர் கனவில் தோன்றி, குறிஞ்சிப்பாடிக்கே திரும்பிச் செல்லும்படியும், அவ்வூரையடுத்த மீனாட்சிப்பேட்டை கிராமத்தில் வசிக்கும் ஒரு நெசவாளி பயன்படுத்தும் பசைக்கல்லை வாங்கி, அதில் தன்னுருவம் செதுக்கி, சிங்கபுரியில்



சுப்பராய சுவாமிகள் மீனாட்சிப்பேட்டை நெசவாளி கல்லை எடுத்து தண்டாயுதபாணியின் திருவுருவம் செதுக்குதல்

பெயருக்குப் பின்னால் ஐயர் என்றே வழங்கி வரலாயினர். முத்தையரின் பிள்ளைகளான சுப்பராய அய்யர், முருகய்யர்



சுப்புராயசுவாமிகள் தியானத்தில்

ஆகியோரின் பரம்பரையினரே இன்றுவரை தொடர்ந்து கோயில் குருக்களாக முறை வகுத்துக் கட்டளைப் புரிந்து பூசை செய்துகொண்டு வருகின்றனர்.



சுப்புராயசுவாமிகள் ஜீவசமாதியின் மேல் நடராஜப்பெருமான் குருமூர்த்தமாக வீற்றிருக்கிறார்.



மாது சிரோமணியையும், குழந்தை முத்துவையும் ஊரை விட்டு அனுப்புதல்

முத்துவோடு அவ்வன்னை ஆடூர் விட்டுக் குறிஞ்சிப்பாடிக்குச் சென்றார். ஊரின் வடக்கே ஊரோடு சேர்ந்த சிங்கபுரி என்னும் பகுதியில் ஒரு கொட்டகை அமைத்துக்கொண்டு பிள்ளையோடு அவர் வசித்தார். முத்துவுக்கு மணப்பருவம் எய்தியது. பிள்ளைக்குக் கண்குளிர திருமணத்தை நடத்தினார்.



முத்து முதலியார் மனைவி மக்களுடன் அன்னம்பாலித்தல்



சிங்கபுரி கந்தனிடம் வள்ளற்பெருமான் வருகை

ஒரு சமயம் வள்ளலார் சத்திய ஞானசபையைக் கட்டிக் கொண்டிருந்தபொழுது, அதன் வசூலுக்காகச் சிங்கபுரிக்கு வந்தார். அப்போது குருதேவரான சுப்பராயர் சுவாமிகளைச் சந்தித்து அன்போடு அளவளாவினார். அப்போது சுவாமிகள் வள்ளல் பெருமானிடம் இவ்வாண்டு ஆடி மாதம் இடி விழுந்து ஞானசபை முன் போடப்பட்ட பந்தல் சேதமுறும் எனக் கூறினர். அப்படியே பின்னாளில் நிகழ்ந்தது.
வள்ளலாருக்குச் சிங்கபுரி கந்தன் மேல் மிகுந்த ஈடுபாடு பக்தி. அடிக்கடி அவர் சிங்கபுரி ஆண்டவனை வழிபட்டுச் செல்வது வழக்கம். ஒரு சமயம் தமது தமையனார் சபாபதி பிள்ளைக்குக் கட்டி வந்துவிட, அதனைச் சிங்கபுரிக்கு வந்து சிங்கபுரி கந்தர் திருப்பதிகம் பாடி வள்ளலார் போக்கினார்.

இவ்வாறாக சுப்பராய சுவாமிகள் சிங்கபுரியில் பழனி ஆண்டவருக்குக் கோயில் கட்டிப் பூசையும் செய்து வந்ததால் அவருக்கு ஐயர் என்ற பட்டம் கிடைத்தது. பின் அவர் பரம்பரையினரும் தமது

சில நாட்களில் முத்து முதலியாருக்கு இரு பிள்ளைகள் தோன்றினர். மூத்தவர் சுப்பராயன், இளையவர் முருகன். இவ்விரு புதல்வர்களும் முருகன் மேல் ஆழ்ந்த பக்தி பூண்டவர்கள்.



சுப்பராய சுவாமிகள் குடும்பத்துடன் பழனியில் தங்குதல்

சுப்பராய சுவாமிகள் எந்நேரமும் பழனியாண்டவனை எண்ணி உருகிக் கொண்டிருப்பார். அவருக்கு மணப்பருவத்தில் தக்க மனையாள் கிடைக்கப் பெற்றார். அது போலவே முருக அடியாரும் தக்க மனையாளைப் பெற்று இல்லறம் புரிந்து வந்தார். அப்போது முத்து முதலியார் சிவனடி சேர்ந்தார்.

சுப்பராய சுவாமிகள் பழனிமலையான்மேல் ஏற்பட்ட பக்தி முதிர்ச்சியுற்றது. அவர் பழனிக்கே சென்று தங்கிவிட எண்ணி, அவ்வாறே மனைவியோடும் புதல்வர்களோடும் சென்றார். அங்கே தமது குடும்பத்தோடு தங்கித் தினமும் பழனியாண்டியைக் கண்குளிரக் கண்டு வழிபட்டு வந்தார். நாட்கள் சில கடந்தன.

கோயில் கட்டி அவ்வுருவத்தை வைத்து வழிபாடு செய்யும்படியும், அவ்வடிவத்திலேயே தாம் வந்து தங்கியிருப்பதாகவும் கட்டளையிட்டு மறைந்தார்.



சுப்பராய சுவாமிகள் சிங்கபுரியில் கோயில் கட்டி வழிபடுதல்

முருகப்பெருமானின் ஆணைப்படியே சுப்பராய சுவாமிகள் சிங்கபுரிக்கு வந்து கோயில்கட்டி முருகனை வழிபட்டார். மேலும் தாம் முருகனடிமையாகி அடிக்கடி தனியே முருகப்பெருமானோடு நேரில் பேசுவார். பிணியுற்று வந்தோருக்கு திருநீறு அளித்து குணமுறச் செய்வார்.

இப்படியிருக்கும் நாளில் ஒருநாள் மந்திரவாதி ஒருவன் ஸ்வாமிக்குப் போடப்பட்டிருந்த பந்தலை மந்திரசக்தியினால் எரித்தான். அதனை ஞானத்தால் அறிந்த சுவாமிகள் அவனுக்குத் தண்டனை கொடுக்க எண்ணினார். ஆனால் அதற்கு முன்னே முருகக் கடவுள் அம்மந்திரவாதிக்குப் பக்கப் பிளவு நோய் கொடுத்தார். அந்நோயினாலேயே மந்திரவாதி இறந்தான்.

இறந்தபின் முருகப்பெருமானின் அருளால் உயிரோடு தோன்றிய முத்தய்யரின் சமாதி மேல்தான் இன்றும் கோயில் மூலஸ்தானம் விளங்கி வருகிறது. கோயிலினுள் நடராஜ சுவாமிக்கென சிறு கோயில் ஒன்று இருக்கிறது. அந்நடராஜர், கோயிலை ஏற்படுத்திய சுப்பராய அய்யரின் சமாதிமேல் எழுந்தருளியுள்ளார்.



ஒவ்வொரு ஆண்டும் மார்கழி கிருத்திகை தினத்தன்று சுப்புராயசுவாமிகளுக்கு முருகப்பெருமான் காட்சி அளித்தல்.

குருதேவரான சுப்பராய சுவாமிகளின் குருபூசை மார்கழி கிருத்திகையில் நடைபெறுகிறது. அன்று கோயிலில் மிகச்சிறப்பாக அப்பூசை கொண்டாடப்படுகிறது.

சுப்பராய சுவாமிகளினால் தோற்றுவிக்கப்பட்ட கோயிலாதலினால், இக்கோயில் அவர் பெயராலேயே சுப்புராயர் கோயில் என்று வழங்கப்படுகிறது.

அதற்குள் நான் செங்குந்தபுரத்திலிருந்து மிதிவண்டியில் விரைந்து வந்து ஐயா அவர்களைக் கண்டுவிட்டேன். இந்நிகழ்வைப் பார்த்த கடலூர் அன்பர், ஐயா அவர்கள் இப்போது தான் தங்களைப் பற்றிக் கூறினார்கள். தாங்கள் வந்துவிட்டீர்கள் எனக் கூறி வியந்தார்கள். வழக்கம்போல் அவர்கள் திருநீறணிவித்து வாழ்த்தினார்கள். இந்நிகழ்ச்சியைக் கடலூர் அன்பர் ஐயா அவர்களின் திருமேனியை சமாதி செய்யும்போது கூட கூறினார்கள்.

எந்த நிகழ்ச்சிக்குச் சென்றாலும் வழிபடு கடவுள் முருகப்பெருமானுக்கு முதல் வணக்கமும் வாழ்வியல் நிகழ்ச்சிகளை நடத்துவிக்க வழியாக அமைந்த ஐயா அவர்களை இரண்டாவதாக வணக்கமும் தெரிவித்த பின்னரே நிகழ்ச்சியைத் தொடங்குவதை மரபாகக் கொண்டுள்ளேன்.

தினத்தந்தி, நக்கீரன், ஆனந்த விகடன், கல்கி போன்ற இதழ்களுக்கும் அகில இந்திய வானொலிக்கும் அளித்த பேட்டியிலும் இவ்வாறே ஐயா அவர்களைப்பற்றி கூறிய பின்னரே மற்ற செய்திகளைக் கூறிவருகின்றேன்.

அவர்களிடம் கற்றுத் தெரிந்து கொண்டு நிகழ்ச்சிகளை செய்விக்கும் அடியேன் அவர்களின் இறுதிச் சடங்கு வழிபாட்டில் அடியேனும் கலந்து கொண்டு தோத்திரங்கள் ஓதி வணங்கும் நிலையை எண்ணி வருந்துவதா? வாய்ப்பாக எண்ணுவதா? தெரியவில்லை.

ஐயா அவர்கள் தாங்கள் மட்டும் அல்லாது தங்கள் புதல்வர்களையும் பெயரர்களையும் தங்களைப் போலவே வளர்த்து இச்சைவ உலகிற்குத் தந்துள்ளது தான் நமமக்கெல்லாம் ஓர் மனநிறைவாகும்.

மண்ணுலகில் பிறந்து இன்னுயிர் நீத்து பொன்னுலகிற்குச் சென்று ஈசனடியில் இன்புற்றிருக்கும் ஐயா அவர்கள் என்றும் நமக்கெல்லாம் நல்லாசி புரிந்து கொண்டிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

இதுபோன்று திரிந்த பல தொடர்களுக்கு அவர்கள் உரிய விளக்கமும் சரியான தொடரையும் கூறி அறிவுறுத்தியுள்ளார்கள்.

**எண்ணம் போல் வாழ்வு :-**

அடியேனின் பழைய வீட்டைத் திருத்தி புதிய வீடு கட்டும் பொருட்டு கடந்த டிசம்பர் 2013ல் ஐயா அவர்களை மனதால் வணங்கிவிட்டு வழிபாடு செய்தோம். கட்டடம் கட்டுவதற்காக பூஜிக்கப்பட்ட 5 செங்கற்களையும் பூஜை அறையில் வைத்து இருந்தோம். இந்நிகழ்ச்சி நடைபெற்ற ஓரிரு நாட்களில் ஐயா அவர்கள் தங்கள் பெயரர் திரு.குமரனின் திருமண அழைப்பு கொடுக்க இவ் இல்லத்திற்கு நேரில் வந்துவிட்டார்கள். வீடுகட்டுதல் தொடர்பாக அவர்களிடம் கூறியதும் பூஜை அறைக்கு வந்து அச்செங்கற்களுக்குத் தாங்களும் பூஜை செய்து விரைவில் பணி தொடங்கி நிறைவுற வேண்டி அவர்கள் நல்லாசியுடன் பணிகள் நிறைவுற்று கடந்த 4.12.2014 முதல் அவ்வில்லத்தில் குடியேறி வசித்து வருகின்றோம்.

**தடைகள் தடைக்கல்ல :-**

1997ம் ஆண்டு ஜுலை 17ஆம் நாளன்று எங்கள் தந்தையாரின் 80ஆம் வயது நிறைவுற்று முத்துவிழா நிகழ்த்த ஐயா அவர்களை அழைத்திருந்தோம். அப்போதே அவர்கள் என்னையும் தயாராக இருக்கச் சொன்னார்கள். நாங்களும் தயாராக இருந்தோம். காலை மணி 7.30 மணிக்கு வேள்வி வழிபாடு தொடங்குவதாகத் திட்டம். ஆனால் 8 மணி ஆகியும் அவர்கள் வரவில்லை. வேறு வழியின்றி திருமுறை ஈடுபாடு மிக்க உள்ளூர் அன்பர்கள் துணையுடன் தயார் செய்யப்பட்டவாறு தெரிந்தவாறு இந்நிகழ்ச்சியை அவர்களை மனதார வணங்கி செய்வித்தோம். இரண்டு நாட்களுக்குப் பின்னர் அவர்கள் நேரில் வந்து பெற்றோருக்கு பிரசாதம் வழங்கி ஆடை அணிவித்துச் சிறப்பு செய்தார்கள். என்னையும் என் துணைவியாரையும் அழைத்து இனிமேல் இவர்கள் செயல்பாடுகள் குழந்தைதனமாக இருக்கும். எனவே,

தொலைபேசி : (04142)-259382
அலைபேசி : 94437 29881

சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம்

தபால்பெட்டி எண் : 2, மனை எண். 64, முருகேசன் சாலை,
என்.எல்.சி. ஆபிசர்ஸ் நகர், வடலூர் – 607 303, கடலூர் மாவட்டம்.

நிறுவனர்
தவத்திரு ஊரன் அடிகளார்
OORAN ADIGAL

நாள்.............................

## அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை

குறிஞ்சிப்பாடி விழப்பள்ளம் சிங்கபுரி சுப்பிரமணிய சுவாமி கோயில் வள்ளலாரால் பாடப்பெற்றது. சிங்கபுரிக் கந்தர் பதிகம் என்று ஒரு பதிகமே (பத்துப் பாடல்கள்) பாடியுள்ளார். திருஅருட்பா ஐந்தாம் திருமுறையில் அது இடம் பெற்றுள்ளது. "சிங்கபுரி தனில் அமர்ந்த தெய்வக்குன்றே" என்பது பாடல்தோறும் அமைந்த ஈற்றுத் தொடர். காப்புச் செய்யுள் ஒரு வெண்பா. "பொன்மகள் வாழ் சிங்கபுரி" என்று அது தொடங்குகிறது. காப்புச் செய்யுள் ஒன்றும் அறுசீர்விருத்தம் பத்தும் ஆகப் பாடல்கள் வள்ளலாரால் பாடப்பெற்றுள்ளன.

சிங்கபுரி முருகன் கோயில் சுப்பராய சுவாமிகள் என்ற தவப்பெரியார் ஒருவரால் கட்டப்பெற்றது. வள்ளற்பெருமான் இதனைப் பாடிய காலம் 1864ஆம் ஆண்டு. வடலூர் தருமச்சாலை கட்டப்பெறுவதற்கு இரண்டுஆண்டுகள் முன்பு. சன்மார்க்க சங்கம் நிறவுவதற்கு ஒரு ஆண்டு முன்பு. பெருமான் கருங்குழி மணியக்காரர் வீட்டில் தண்ணீர் விளக்கெரிந்த இல்லத்தில் எழுந்தருளிய காலத்தில் சிங்கபுரிக் கந்தரைப் பாடியுள்ளார்.

குறிஞ்சிப்பாடி சுப்பராய சுவாமி, கோலசுவாமி, திருஆமாத்தூர் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் ஆகிய நான்கு பெரியவர்கள் வழிபட்டது சிங்கபுரி முருகன் கோயில். இந்நால்வரில் பின் இருவரும் இக்கோயிலைப் பாடியுள்ளனர்.

இருவரும் பொறுமையாக இருந்து அவர்களுக்குச் செய்யவேண்டியதைச் செய்யுமாறு அறிவுறுத்தினார்கள்.

பின்னர் தாம் வர இயலாத நிலை ஈசன் செயல். தாங்கள் வழிபடும் தெய்வம் முருகப்பெருமான் தந்தைக்கு உபதேசம் செய்தவர். எனவே, தங்களைக் கொண்டே தங்கள் தந்தையாரின் முத்துவிழா நிகழவேண்டும் என்பது இறையருள். அதனால் தான் இந்நிகழ்வு இவ்வாறு நடைபெற்றது என்று கூறி வாழ்த்தினார்கள். இதில் எங்களையும் தயாராக இருக்குமாறு ஐயா அவர்கள் பணித்தது தனிச்சிறப்பாகும். இல்லாவிடில் செய்வதறியாது திகைத்திருக்க நேரிட்டிருக்கும்.

தாங்கள் வர இயலாத நிலையில் இவ்வூர் செங்குந்தர் மண்டப விநாயகர் திருக்கோவில் மண்டலாபிஷேகம், குவாகம் காளியம்மன் கோயில் மண்டலாபிஷேகம் மற்றும் சிலரது இல்லத் திருமணங்களை அடியேனைக் கொண்டு செய்விக்குமாறு கூற அடியேனும் அவர்கள் பணித்தவாறே செய்து மனமகிழ்ந்துள்ளேன்.

பாராட்டு

இப்பகுதியில் அடியேன் செய்விக்கும் நிகழ்ச்சிகளுக்காகப் பொருள் ஏதும் பெறுவதில்லை. தொண்டுள்ளத்துடன் மட்டும் செய்து வருகின்றேன். இதைப் பற்றி ஐயா அவர்கள் திருமுதுகுன்றம் குமாரதேவர் திருமடத்தில் எடுத்துரைத்து சுவாமிகளின் பொன்விழாவில் திருமுறைச் செல்வர் என்ற விருது வழங்கிச் சிறப்புச் செய்தார்கள். காஞ்சிகாமகோடி பீடம் தங்கள் மடத்தின் சார்பாக நடைபெற்ற விழாவில் வழங்கப்பட்ட பாராட்டு சான்றிதழை செங்குந்தபுரம் கோயில் மண்டலாபிஷேகம் விழாவிற்கு வருகை புரிந்த ஐயா அவர்களிடம் காட்டி வாழ்த்து பெற்றேன். விழாவிற்கு வருகை புரிந்தோர் முன்னிலையில் சங்கரமடத்தில் சான்றிதழ் பெறுவது எளிதன்று அங்கு அவர் சான்றிதழ் பெற்றிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது என்று கூறி வாழ்த்திச் சிறப்பித்தார்கள்.



உ
சிவமயம்

அலைபேசி : 99422 08962

அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருமடம்,
தமிழ்நெறி வேள்வித் தவநெறியாளர், நூலாசிரியர், பதிப்பாசிரியர்
இலவச தேவாரப்பாடசாலை, தஞ்சை சிவனடியார் திருக்கூட்டம்
811, தத்தோஜியப்பா சந்து, தஞ்சாவூர் - 613 001.
தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு) சரசுவதி மஹால், தஞ்சாவூர் -1.
தேவாரச் சீர்பரவுவார், சிவநெறி திருத்தொண்டர், சிவநெறிப்புரவலர்,
தேவாரப்பெருநிதி, செந்தமிழாகமச் செல்வர், சிவப்பணிச் செல்வர்.

திருப்பெருந்திரு. சொக்கலிங்க சுவாமிகள்
மடாதிபதி & இயக்குநர்

நாள் : 31-8-2015

கும்பாபிஷேகச் சக்கரவர்த்தி
தெய்வத்திரு **கொ.மு.சிங்காரவேல் அய்யர்**

## இரங்கற்பா

தாயிற் சிறந்ததிரு சிங்கார வேலய்யர்
கோயில் வளங்கள் பலகண்டார் – போயினார்
நல்முருகன் பாதம் பணிந்திடவே – அங்கிருந்தே
எல்லோரையும் காப்பார் இனிதே.

திருப்பெருந்திரு
**சொக்கலிங்க சுவாமிகள்**
மடாதிபதி (அகவை 92)

### நிறைவான வாழ்த்து

அடியேனின் மணிவிழா கடந்த 3.3.2015 அன்று எங்கள் புதிய இல்லத்தில் திருப்பனந்தாள் காசித்திருமடம் ஓதுவாமூர்த்திகள் - உள்ளூர் சிவபூசகர் அன்பர்கள் துணையுடன் ஐயா அவர்களை மனதால் வணங்கி எளிய முறையில் நடைபெற்றது. உடல்நலமற்றிருந்த ஐயா அவர்களைச் சந்தித்து நேரில் வாழ்த்து பெறக் கடந்த 8.3.2015 அன்று அவர்கள் இல்லத்திற்குச் சென்றோம். இயலாத நிலையிலும் எழுந்து நின்று வழக்கமான நகையொளிர் திருமுகத்துடன் திருநீறணிவித்து வாழ்த்தினார்கள் நிகழ்ச்சி நடந்த விபரம் கூறினேன். இது ஒரு சாந்தி அதாவது மனநிறைவிற்காகச் செய்வது அவரவர் நிலைக்கேற்ப செய்து. மனநிறைவடைவதே சிறப்பு. இல்லத்தில் செய்வது சிறப்பு. அதுவும் தங்கள் புதிய இல்லத்தில் நிகழ்த்தியது பெருஞ்சிறப்பிற்குரியது என்று கூறி வாழ்த்தினார்கள்.

### அடியேனின் ஈடுபாடு

1989 டிசம்பர் திங்கள் ஐயா அவர்களை முன் முதலாக சந்தித்தது முதல் இன்றுவரை அவர்கள் மீது அடியேன் அன்பு கலந்து ஓர் மதிப்பு வைத்துள்ளேன். காரணம் அவர்கள் அடியேன்பால் கொண்ட அளவு கடந்த பிரியம்தான். இப்பகுதிக்கு அவர்கள் வந்திருப்பதாகத் தெரிந்தால் உடனே தேடிச்சென்று அவர்களை வணங்கி வாழ்த்து பெறுவதும் அந்நிகழ்ச்சியில் அவர்கள் என்னையும் ஆட்படுத்துவதும் வழக்கம்.

அருகிலுள்ள செங்குந்தபுரத்திற்கு ஒரு நிகழ்ச்சிக்கு வந்துள்ளதாக அறிந்தேன். பள்ளிப் பணி முடிந்து மாலையில் அவர்களைக் காணச்சென்றேன். அவர்கள் நிகழ்ச்சி முடிந்து ஜெயங்கொண்டம் பேருந்தில் சென்றதாக அங்குள்ளோர் கூறினர். இச்சமயத்தில் ஐயா அவர்கள் தங்கள் உடன் வந்த கடலூர் அன்பரிடம் தான் வந்தது எனக்குத் தெரியாது போலும், தெரிந்தால் எப்படியும் வந்துவிடுவார் என்று கூறிக்கொண்டு ஜெயங்கொண்டம் பேருந்து நிலையத்தில் இறங்கித் தேநீர் அருந்தச் சென்றுள்ளார்கள்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

© 04144 - 222075



# ஸ்ரீ மௌன மடாலயம்,

39, சபாநாயகர் தெரு, சிதம்பரம் - 608 001

ஸ்ரீலஸ்ரீமௌன சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

தேதி : 4.6.2015

சிற்சபை பொலியத் திருநடம் புரியும்

அற்புதக் கூத்த னடியினை மறவாத

திருவாளர் கொ.மு.சி.சரவணன் அவர்கட்குத் திருவருளாலும் குருவருளாலும் நலம் வளர்க. சிவஞானப் பெருஞ்செல்வம் முதலியன மேன்மேலாகுக.

அருள்மிகு தண்டாயுதபாணிக்குப் பன்னெடுங்காலம் அகத்திரு தொண்டுகள் செய்து, தனது சிறிய தந்தையார் ஆறுமுக ஐயர் அவர்களோடு அயராது திருக்கோயில் பணிகளைச் செய்து, அவருக்குப் பின்னே தானே திருக்கோயில் தொண்டுகளைச் செய்ததோடு, மூன்று முறை தண்டாயுதபாணித் திருக்கோயில் பரிவார தெய்வங்கட்குத் திருக்குட நீராட்டுப் பெருவிழா செய்த பெருமைக்கு உரியவர் தெய்வத்திரு. கொ.மு. சிங்காரவேலய்யர் அவர்கள்.

அருள்மொழி அரசு சைவத்திரு. வாரியார் சுவாமிகள் அவர்களால் கும்பாபிஷேகச் சக்கரவர்த்தி என்று பாராட்டப்பெற்றவர்கள். திருக்கோயில் முன்பாக மூன்று நிலை ராஜகோபுரம் அமைத்துக் கும்பாபிஷேகம் செய்த பெருமைக்குரியவர்கள்.

தமிழகமெங்கும் உள்ள திருக்கோயில்கள் எண்ணற்றவைகளுக்குக் கும்பாபிஷேகம் செய்தவர்கள். அவர்களது ஆன்மா தண்டமிழ்க்கடவுள் தண்டாயுதபாணியின் தண்நிழலில் நீங்காது நிலைபேறுடையதா அமையட்டும்.

அன்புடன்

**ஸ்ரீலஸ்ரீமௌன சுந்தரமூர்த்தி சுவாமிகள்**

# பொன்மகள் வாழ் சிங்கபுரி

## இடமும், பெயரும்

தமிழகத்து கடலூர் மாவட்டத்தில் உள்ள கடலூருக்கும் விருத்தாசலத்துக்கும் நடுவில் அமைந்துள்ள குறிஞ்சிப்பாடியின் வடக்குப்பகுதியே சிங்கபுரி. இச்சிங்கபுரி தற்போது விழப்பள்ளம் என்று வழங்கப்படுகிறது.

## கோயில் வரலாறு

ஏறக்குறைய 300 ஆண்டுகளுக்கு முன் கடலூர் மாவட்டத்து குறிஞ்சிப்பாடியை அடுத்த ஆடூர் கிராமத்தில் வீர சைவ செங்குந்த முதலியார் குடும்பம் ஒன்று வாழ்ந்திருந்தது. அக்குடும்பம் முருகன்மேல் ஆழ்ந்த பக்தி கொண்டது. நாளும் முருக சேவையே தனது பேரின்பமாகக் கருதித் தொண்டு புரிந்து வந்தது. அக்குடும்பத்தில் காரைக்கால் அம்மையார் போன்ற ஒரு மாது சிரோன்மணி வாழ்க்கைப்பட்டார். அவருக்கு ஓர் ஆண்பிள்ளை, அப்பிள்ளைக்கு முத்தய்ய தம்பிரான் எனப் பெயரிட்டு நாளும் அன்போடு பேணி வளர்த்து வந்தார் அம்மாது. முத்துவுக்கு ஐந்தாண்டு பிராயம் நடக்கையில் பெண்ணரசியின் கணவர் சிவனடியடைந்தார். தந்தையை இழந்த முத்துவுக்கு மறுவருடத்திடல் அம்மை வார்த்தது. அது குளிர அவர் இறந்தார். முத்துவைச் சமாதி வைத்தனர். பிள்ளையை இழந்த துக்கத்தை அம்மாதினால் தாங்கமுடியவில்லை. தினமும் சமாதிக்குச் சென்று கதறியழுவார். "ஐயனே முருகா! எனக்கிருந்த ஒரு பிள்ளையும் இறந்தானே; நான் என் செய்வேன் என் பிள்ளையை உயிரோடு எழுப்பித்தா" என்று பழனிமலையானை நினைந்து உள்ளமுருக வேண்டுவார்.

ஒருநாள் அப்படி அவர் கதறி வேண்டியபோது, ஒரு பெண் அவர் முன்தோன்றி, "அம்மணி! வரும் வெள்ளிக்கிழமை குளித்து நல்லாடையுடுத்திக்கொண்டு இங்கே வந்தால் உன் குழந்தையைத் திரும்பவும் நீ உயிரோடு கண்டு பெறலாம்" என்று சொல்லி மறைந்தார்.

வள்ளலாரால் பாடப்பெற்ற சிங்கபுரி முருகன் கோயில் ஸ்தாபகர் சுப்பராய சுவாமிகள் வம்சமரபில் ஐந்தாவது தலைமுறையில் வந்த பெருந்தகை அன்பர் இன்று அதன் பரம்பரைப் பூசகராக, தர்மகர்த்தாவாகச் சீரோடும் சிறப்போடும் விளங்கிய சிவத்திரு. கொ.மு. சிங்காரவேல் ஐயர் அவர்கள், திருக்கோயில் வழிபாட்டு முறைகளிலும் கும்பாபிஷேகம் முதலிய திருக்கோயில் சீரிய முறையிலும் வல்லவர். தமிழ்வழியிலும் வைதீக வழியிலும் பல திருக்கோயில் குடநீராட்டு விழாக்களைச் சிறப்போடு நடத்தியவர். சுமார் ஏழு எட்டு கும்பாபிஷேகங்களில் நாம் கலந்து கொண்டு அருளாசி வழங்கியது உண்டு. நாம் எழுதியுள்ள வீர சைவ ஆதீனங்கள் என்ற நூலின் பின் இணைப்பில் சிங்காரவேல் ஐயரைக் குறித்தும் எழுதியிருக்கிறோம். நம் உள்ளத்திற்கு உவப்பானவர். வீர சைவ மடங்கள் பலவற்றுடனும் தொடர்பு கொண்டவர். நன்கு மதிக்கப் பெற்றவர்.

அவரது பெரும்பிரிவு நமக்கு வருத்தமளிப்பது எனினும், அப்பெருந்தகையார் தம்பேரன் சிவத்திரு எஸ். குமரகுருநாதனை மரபுவழித் திருக்கோயில் வழிபாடுகளிலும் கிரியைகளிலும் பயிற்சி அளித்து, மரபை விளங்கச் செய்திருப்பது பெரிதும் ஆறுதல் அளிக்கிறது.

அன்னாரது ஆன்ம சாந்திக்கு நாம் வள்ளற்பெருமானையும், பெருமான் பாடிய சிங்கபுரிக் கந்தனையும் பிரார்த்திக்கிறோம். சிங்காரவேலர் சிறப்புப்பணிகள் வழி வழி வளர்க. சிங்கபுரி முருகன் திருவடி நிழலில் சிங்காரவேலரின் ஆன்மா இளைப்பாறுக. இன்புறுக. எல்லாருக்கும் எல்லா நலன்களும் உண்டாகப் பிரார்த்தனை.

வாழ்க! வாழ்க!!

# அணிந்துரை

தெய்வ மணம்கமழ்நல் தமிழ்நாட்டில் திருப்பாதிரிப்புலியூர், திருத்தில்லை, திருமுதுகுன்றம், திருவதிகை ஆகிய திவ்விய திருத்தலங்களுக்கு நடுநாயகமாகக் குறிஞ்சி நிலத்திற்குரிய குமரன் குடிகொண்டது சிங்கபுரி. தவத்திரு சுப்புராயர் சுவாமிகள் தோன்றிய புகழ் உடையது. வள்ளல் இராமலிங்க சுவாமிகள் தம் தமையனார் சபாபதி பிள்ளை நோய் நீங்க வேண்டிப் பதிகம் பாடிய புகழ் உடையது.

இச்சிங்கபுரி முற்காலத்தில் விழப்பள்ளம் என்று வழங்கி வந்ததைச் சிங்கபுரி என்று அருட்பிரகாசவள்ளலார் மாற்றி மங்கலப் பெயராகச் சிங்கபுரி என்று திருவாய் மலர்ந்தருளி இருக்கின்றார்கள்.

சிங்கபுரி திருத்தலம் விருத்தாசலம், கடலூர் இருப்புப்பாதை நெடுஞ்சாலைக்கு அருகில் அமைந்துள்ளது. சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் சுப்புராயர் சுவாமிகள் பழனி திருத்தல தண்டாயுதபாணி சுவாமியின் அருளாணையின் வண்ணம் தமது தந்தையின் சமாதி மேல் தாண்டாயுதபாணி சுவாமியை எழுந்தருளச் செய்து வழிபாடு செய்து வந்தார்கள். மற்றும் வள்ளி தெய்வானை உடனுறை செல்வ சிங்காரவேலவர் ஐம்பொன் திருமேனி வடித்து வழிபட்டு வந்துள்ளார்கள். அவர்கள் காலத்திற்குப் பின் மேன்மேலும் சிறப்பான வழிபாடுகளும் திருக்கோயில் பல சிறப்பான திருப்பணிகள் நடைபெற்றுப் பொலிவோடு விளங்கி வருகிறது. பொன்மகள் வாழ் சிங்கபுரி மறை ஒழுக்கம் தவிராது சிறக்கவாழ் சிங்கபுரி பெருமக்கள் ஆன்மீகத் தொண்டு வளர வேண்டி எனது பேரனின் திருமண விழாவில் இம்மலரினை வெளியிட்டு மகிழ்கிறேன்.

– கொ.மு.சிங்காரவேல் ஐயர்

## மூர்த்தி

மூலஸ்தானத்தில் தண்டபாணி சுவாமி எழுந்தருளி உள்ளார். அவர் வேலோடு காட்சி கொண்டு அருள்பாலிக்கிறார். கோயிலின் உற்சவமூர்த்தி வள்ளி தெய்வயானையோடு ஸ்ரீ செல்வசிங்காரவேலவர் அருளாட்சி புரிகிறார்.

## தலச்சிறப்பு

வள்ளலார், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் போன்ற பெருமகான்களெல்லாம் இத்தலத்தைத் தரிசித்துச் சென்றுள்ளார்கள். மற்றும் வேண்டுவோர்க்கெல்லாம் வேண்டும் அருள் தருகின்ற பழனியாண்டவரே இங்கு எழுந்தருளியுள்ளார்.

## பாடிய பெரியோர்கள் - பாடல்கள்

வள்ளற்பெருமான் மட்டுமே இக்கோயிலையும் இறைவனையும் போற்றிப் பாடியுள்ளதாகத் தெரிகிறது. பாடல்கள் வள்ளலரால் அருளப்பட்ட கந்தர் திருப்பதிகம் மட்டுமே.

## கோயில் அமைப்பு

மூன்று மாட இராஜகோபுரத்துடன் விளங்கும் இக்கோயில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. சுற்றுச்சுவருக்குள்ளே முன் மண்டபத்துடன் தனியாக மூல ஸ்தான கோயில் உள்ளது. இக்கோயில் பெரிய கோயில். இதன் முன் செப்புத் தகடு வேய்ந்த கொடிக்கம்பமும், அதன் கீழே மயில் சிற்பமும் உள்ளன. மூலஸ்தானக் கோயிலினுள்ளேயே தெற்கு பார்த்தபடி வாலாம்பிகையின் கோயில் அமைந்துள்ளது. மூலஸ்தானத்துக்கு தெற்கே வைத்தியநாதசுவாமி கோயில் அமைந்துள்ளது. கோயிலினுள் லிங்கமே வைத்தியநாத சுவாமியாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. மூலஸ்தானத்தின் உட் பிரகாரத்தில் வடமேற்கில் கிழக்கு நோக்கி உற்சவர் சந்நிதி உள்ளது. உற்சவமூர்த்தியாக வள்ளி தெய்வயானையோடு காணப்படும் ஸ்ரீசெல்வசிங்காரவேலர் விளங்குகின்றார்.

சமேத முத்துக்குமார சுவாமி, உற்சவ விநாயகர் ஆகிய பல தெய்வ செப்பு விக்கிரகங்கள் கோயிலில் தனியறையில் வைக்கப்பட்டுள்ளன.

## கோயில் குளம்

குளம் கோயிலின் முன்னே நூறு மீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது. பிணி தீர்க்கும் குணம் கொண்ட தீர்த்தம் இது என்று பக்தர்களால் பாராட்டப்படுகிறது.

## வள்ளலார் வழிபாடு

வள்ளற்பெருமானார் வழிபட்ட தலங்கள் மொத்தம் பதினேழாகும்.

அவை :

1. சென்னை கந்தகோட்டம்
2. திருத்தணிகை
3. சென்னை ஏழுகிணறு (துலுக்கானத்தம்மன் கோயில்)
4. திருவொற்றியூர்
5. திருவலிதாயம்
6. திருஎவ்வளூர்
7. திருக்கண்ணமங்கை
8. கருங்குழி
9. வடலூர்
10. சிங்கபுரி (குறிஞ்சிப்பாடி)
11. திருமுல்லைவாயில்
12. புள்ளிருக்கு வேளூர் (வைதீசுவரன்கோயில்)
13. திருவாரூர்
14. திருவண்ணாமலை
15. திருமுதுகுன்றம் (விருத்தாசலம்)
16. திருவதிகை
17. திருத்தில்லை

ஆகிய தலங்களாகும்.

வள்ளலார் அருளிய

# கந்தர் திருப்பதிகம்

## சிங்கபுரி

திருச்சிற்றம்பலம்

நேரிசை வெண்பா

பொன்மகள்வாழ் சிங்கபுரி போதனறு மாமுகன்மேல்
நன்மைமிகு செந்தமிழ்ப்பா நாமுரைக்கச் – சின்மயத்தின்
மெய்வடிவா நங்குருதாள் வேழமுகன் தன்னிருதாள்
பொய்யகலப் போற்றுவம்இப் போது. 1

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சீராரு மறையொழுக்கந் தவிராது
நான்மரபு சிறக்க வாழும்
ஏராரு நிதிபதியிந் திரன்புரமும்
மிகநாணும் எழிலின் மிக்க
வாராருங் கொங்கையர்கள் மணவாள
ருடன்கூடி வாழ்த்த நாளும்
தேராரு நெடுவீதிச் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 1

உம்பர்துயர் கயிலையரற் கோதிடவே
அப்பொழுதே உவந்து நாதன்
தம்பொருவில் முகமாறு கொண்டுநுதல்
ஈன்றபொறி சரவ ணத்தில்
நம்புமவ ருயவிடுத்து வந்தருளும்
நங்குகனே நலிவு தீர்ப்பாய்
திங்கள்தவழ் மதில்சூழுஞ் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 2

வானவர்கோன் மேனாளிற் றரமறியா
திகழ்ந்துவிட விரைவிற் சென்று
மானமதில் வீற்றிருந்தே அவன்புரிந்த
கொடுமைதனை மாற்றும் எங்கள்
தானவர்துங் குலமடர்த்த சண்முகனே
இப்பிணியைத் தணிப்பாய் வாசத்
தேனவிழும் பொழில்சூழுஞ் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 6

மட்டாரும் பொழில்சேரும் பரங்கிரிசெந்
தூர்பழனி மருவு சாமி
நட்டாரும் பணிபுரியு மாறுதலை
மலைமுதலாய் நணுகி எங்கள்
ஒட்டாதார் வலியடக்கி அன்பர்துதி
ஏற்றருளும் ஒருவ காவாய்
தெட்டாதார்க் கருள்புரியுஞ் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 7

முன்செய்த மாதவத்தால் அருணகிரி
நாதர்முன்னே முறையிட் டேத்தும்
புன்செயல்தீர் திருப்புகழை ஏற்றருளும்
மெய்ஞ்ஞான புனிதன் என்றே
என்செயலி லிரவுபக லொழியாமல்
போற்றியிட இரங்கா தென்னே
தென்திசைசேர்ந் தருள்புரியுஞ் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 8

பொல்லாத சூர்க்கிளையைத் தடிந்தமரர்
படுந்துயரப் புன்மை நீக்கும்
வல்லானே எனதுபிணி நீநினைந்தால்
ஒருகணத்தில் மாறி டாதோ
கல்லாதேன் எனினும்எனை இகழாதே
நினதடியார் கழகங் கூட்டாய்
செல்லாதார் வலியடக்குஞ் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 3

பண்டுறுசங் கப்புலவர் அருஞ்சிறையை
தவிர்த்தருளும் பகவ னேஎன்
புண்தருவிந் நோய்தணிக்கப் புரையிலியோய்
யான்செய்யும் புன்மை தானோ
தண்டையெழில் கிண்கிணிசேர் சரணமலர்க்
கனுதினமும் தமியேன் அன்பாய்த்
தெண்டனிடச் செய்தருள்வாய் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 4

தாவாத வசியர்குலப் பெண்ணினுக்கோர்
கரமளித்த சதுரன் அன்றே
மூவாத மறைபுகலும் மொழிகேட்டுன்
முண்டகத்தாள் முறையிற் றாழ்ந்து
தேவாதி தேவனெனப் பலராலுந்
துதிபுரிந்து சிறப்பின் மிக்க
தீவாய்இப் பணிதொலைப்பாய் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே.

5

பொறுத்து, சபாபதி பிள்ளை தம்தம்பியைத் தன் ஆசிரியரான காஞ்சிபுரம் சபாபதி முதலியாரிடம் அழைத்துக்கொண்டு போய்க் கல்வியறிவு வளர்க்கும்படி வேண்டினர். நாலைந்துநாள் பாடஞ்சொல்லி வரும் போதே மாலையில் நாள்தோறும் பிள்ளைப்பெருமான் சென்னையில் கந்தசாமி கோயிலுக்குச் சென்று அருமையான பாடல்களைப் பாடிவருவதைக் கேள்வியுற்ற சபாபதி முதலியார் பிள்ளைப்பெருமானது கல்வித் திறத்தைக் கேள்வியுற்றுச் சாக்குப் போக்குகள் சொல்லி, பாடம் சொல்லாமலேயே காலதாமதஞ் செய்தனர்.

பிறகு பிள்ளைப்பெருமான் ஆலய வழிபாட்டிற்றிளைத்தலின் அருமை உணராது லௌகீக முயற்சியிலேயே பெரிதும் உழன்றுகொண்டிருந்த சபாபதிபிள்ளை, தன் தம்பி படிக்காமல் திரிகின்றார் என்று சிலரிடம் குறை கூறினர். அதைக்கேள்வியுற்ற பிள்ளைப்பெருமான் அன்று மாலை முதல் படிப்பதாக கூறிப்போய், பூ, பழம், தேங்காய், ஊதுவர்த்தி முதலிய வாங்கி வந்து தம் வீட்டின் மெத்தை அறையில் ஓர் கண்ணாடியைச் சுவரில் மாட்டித் திருவிளக்கேற்றி மலர்ச்சூட்டிப் பழம் படைத்துக் கற்பூர தீபங் காட்டி நெடுநேரம் அக்கண்ணாடியை நோக்கின வண்ணமாய்த் தியானித்தார். அன்று அக்கண்ணாடியில் தணிகை முருகப் பெருமான் திருவுருவம் தோன்ற அன்று முதல் அவ்வுருவ உபாசனை தொடங்கினர். முருகக்கடவுள் உபாசனையால் கலைஞானம் அனைத்தும் ஓதாதுணர்ந்தனர்.

இவ்வாறாக வள்ளலார் முருகப்பெருமான் மீது பேரன்பு பூண்டு பதிகங்களும் பாடியருளினார். கந்த கோட்டம், திருத்தணிகை ஆகிய முருகத் தலங்களைப் பாடியருளியதுபோல், பின்னார் கருங்குழியில் வாழ்ந்த காலத்தில் சிங்கபுரியையும் போற்றிப் பதிகம் பாடியுள்ளார்.

1858-ம் ஆண்டு தொடங்கி சிதம்பரத்தையெல்லாம் வழிபட்டுக்கொண்டு, கருங்குழியில் வந்து தங்கினார் அடிகளார். கருங்குழியில் தங்கியிருந்த காலையில், அங்கிருந்து அடிக்கடி

தமிழ் இலக்கிய வரலாறு சங்கத் தமிழில் தொடங்கும். சங்கத் தமிழ் இலக்கியங்கள் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க் கணக்கு ஆகும். பத்துப்பாட்டில் முதல் பாட்டு திருமுருகாற்றுப்படை, திருமுருகனின் புகழைப் பேசுவதிலேயே சங்க இலக்கியம் தொடங்குகிறது. இதனைப் பாடியவர் நக்கீரர். இவர் இதனைப் பாடியதற்கு ஒரு வரலாறு உண்டு.

செண்பக பாண்டியனின் சந்தேகம் தீரும் முறையில், பெண்களின் கூந்தலுக்கு இயற்கையில் மணம் உண்டு என இறைவன் கவிதை எழுதி தருமி என்ற அர்ச்சகரிடம் தந்தனுப்பினார்.

அவன், அதனைத் தந்து பொற்கிழியைப் பெற முற்பட்டபோது, நக்கீரர் பாட்டில் குற்றம் எனத் தடுத்தார். இறைவனே புலவராக வந்தார். அவரிடமும் பெண்கள் கூந்தலுக்குச் செயற்கையில்தான் மணம் என வாதிட்டார். இறைவன் நெற்றிக்கண் காட்டியும் அவர் உணரவில்லை. இறைவன் நெற்றிக் கண்ணால் சிறிது சுடச் செய்து, வெப்பு நோய் தந்தார். நக்கீரர் மன்னித்தருள வேண்டியபோது, கயிலைப் பயணம் மேற்கொண்டு தரிசித்தால் நோய் தீரும் என்றருளினார்.

நக்கீரர் செல்லும் வழியில் ஓர் ஆல மரத்தடியில் சிவபூசை செய்தார். அம்மரத்திலிருந்து ஓர் இலை பாதி அங்கிருந்த குளத்து நீரிலும் பாதி பூமியிலும் விழுந்தது. தரையில் விழுந்த பகுதி பறவையாகவும், நீரில் விழுந்த பகுதி மீனாகவும் ஆகி ஒன்றை ஒன்று இழுத்தன. அந்தச் சலசலப்பில் நக்கீரர் கண் திறந்து பார்த்தார். சிவபூசை தவறியது. அங்கே கற்கிமுகி என்ற பூதம் தோன்றி அவரைக் கொண்டு போய் ஒரு குகையில் சிறை செய்தது.

இதுபோல் இதற்கு முன்பே 999 பேரைச் சிறை வைத்திருந்தது. இவரோடு 1000 பேர். அனைவரையும் கொன்று தின்று விடும். அங்கிருந்தோர் நக்கீரரிடம் கூறி வருந்தினர். அப்போதுதான் நக்கீரர் இதய குகையில் இருந்தருளும் குகனிடம் வேண்டி திருமுருகாற்றுப்படை பாடி முறையிட்டார். முருகன்

### நோய் நீக்கப் பயன்தரு திருப்பதிகம்

திருமுறைகளில் நோய் நீக்கம் வேண்டியப் பாடப்பெற்ற பல திருப்பதிகங்கள் உள்ளன. கூற்றாயினவாறு விலக்ககில்லீர் என்பது திருநாவுக்கரசர் வயிற்றுவலி நீங்கப் பாடிய திருப்பதிகம். ஆலந்தான் உகந்து அமுது செய்தானை என்பது சுந்தரர் கண் நோய் நீங்கப் பாடியருளிய திருப்பதிகம்.

அந்த வகையில் வள்ளலார் அருளிய இத்திருப்பதிகமும் நோய் நீக்க வேண்டிய திருப்பதிகமாக அமைந்துள்ளது.

இது வள்ளற்பெருமான் தன் சகோதரருக்காகப் பாடியது என்றாலும், அவர் அடியவர்களாகிய ஆன்மநேயச் சகோதரர்களாகிய நாமும் நம் நோய் நீங்கப் பாடிப் பயன்பெறலாம். நோய், பிணி எனப் பொதுவாக உள்ளதால் எந்த நோய்க்கும் இதைப் பாராயணம் செய்யலாம்.

இனி திருப்பதிகத்தை முழுமையாகப் பார்ப்போம்.

### பாடல் எண்ணிக்கை

பதிகம் என்பது பத்து பாடல்கள் கொண்டதுதான். இத்திருப்பதிகம் முதலில் விநாயகர் காப்பாக ஒரு வெண்பாவும், பின் பதிகமாக அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் பத்தும் கொண்டு அமைந்துள்ளது.

### மங்கலச் சொல்

பொன்மகள் எனக் காப்புப் பாடலும், சீராரும் எனப் பதிகமும் மங்கலச் சொல் கொண்டு தொடங்குகின்றன.

### தனிப்பதிகம்

திருவருட்பாவில் தொடர்ந்து அமைந்த பாடல்கள் போல் அல்லாமல், இது தனிப்பதிகம் என்பதால் காப்புப் பாடல் அமைந்துள்ளது.

சின்மயத்தின் மெய்வடிவாம் நம் குருதாள், வேழமுகன் தன் இருதாள் போற்றப்படுகின்றன. சின்மயத்தின் மெய்வடிவம் –

தான் வளர்த்த தெய்வ யானை என்ற பெண்ணைத் திருமுருகனுக்குத் திருமணம் செய்து தந்தருளினான்.

விண்ணவர் கோன் அருந்துயரம் நீங்கிடவும்
மாது தவவிளைவும் நல்கும்
கண்ணகன்ற பேரருளின் கருணையினால்
குஞ்சரியைக் காதலோடு
மண்ணுலகோர் முதல் உயிர்கள் மகிழ்ந்திடவும்
மணம் புரிந்த வள்ளலே (9)

என இதனை வள்ளலார் குறிப்பிடுகின்றார்.

முருகன் அவதாரத்தால் மகிழ்ந்த தாய்மாமன் திருமாலின் இருகண்களிலிருந்தும் தோன்றிய இருபெண்கள் அமுதவல்லி, சுந்தரவல்லி. இருவரும் திருமுருகனை மணக்கத் தவம் புரிந்தனர். முருகன் காட்சி தந்து அமுதவல்லி இந்திரன் மகளாகவும், சுந்தரவல்லி மண்ணில் குறமகளாகவும் வளர்ந்திடுமாறும் சூரபதுமன் போருக்குப் பின் மணப்பதாகவும் அருள் செய்தான்.

எனவே இந்திரனின் நன்றிக் கடன் மட்டுமல்லாமல், தெய்வயானையின் தவப்பயனாகவும் இது அமைந்தது. குஞ்சரம்-யானை, குஞ்சரி-தெய்வயானை. தெய்வயானை ஐராவதத்தால் வளர்க்கப்பட்டவள்.

வள்ளிமலை என்ற பகுதியிலே திருமால் சிவமுனிவராக வந்தார். திருமகள் மானாக வந்தாள். சிவமுனிவர் பார்வையால் மான் கருவுற்றது. சுந்தரவல்லி அக்கருவில் வந்து வள்ளியாகப் பிறந்தாள். நம்பிராசன் மகளாக வளர்ந்தாள். தக்க பொழுதில் முருகன் எழுந்தருளி அவளை மணந்தருளினான். இதனை,

மாசகன்ற சிவமுனிவர் அருளாலே
மான் இடமாய் வந்த மாதின்
ஆசில்தவப்பேறளிக்க வள்ளிமலை
தனைச்சார்ந்தே அங்குக்கூடி
நேசமிகு மணம் புரிந்த நின்மலனே. (10)

என வள்ளலார் குறிப்பிடுகின்றார். (மாசு, ஆசு-குற்றம்)

இருப்பார். அவரை மணந்து கொண்டவன் முருகன் நாமத்தைச் சொல்லக்கூடாது எனக் கண்டித்தான். அதையும் மீறி ஒருநாள் அவர் கைகூப்பி முருகா முருகா எனக் கூறி உள்ளம் உருகும்போது, அவன் அவர் கையை வெட்டி விட்டான். அப்போது முருகன் எழுந்தருளி அப்பெண்ணின் வெட்டுண்ட கையை மீண்டும் உருப்பெறச் செய்தான். இதனை,

தாவாத வசியர்குலப் பெண்ணினுக்கு ஓர் கரமளித்த சதுரன் (5)

என வள்ளலார் போற்றுகின்றார். (தாவாத - குற்றமற்ற) இவ்வரலாற்றை, ஒரு தனிப்பாடல்,

ஒருமுருகா என்று உள்ளங்குளிர உவந்து உடனே
வருமுருகா என வாய்வெருவா நிற்பக் கை இங்ஙனே
தருமுருகா என்றுதான் புலம்பா நிற்கும் தையல் முன்னே
திருமுருகாற்றுப் படையுடனே வரும் சேவகனே

எனக் கூறுகின்றது.

**நாளும் வணங்கிடல்**

பிணி தீர்த்தருளல் மட்டுமன்றி, எந்த நாளும்திருமுருகன் திருவடிகளை வணங்குமாறு அருள் செய்யவேண்டும் எனவும் வேண்டிக் கொள்கிறார். அவனை வணங்கவும், அவன் அருள் வேண்டும்.

அவன் அருளாலே அவன்தாள் வணங்கி

என்பார் மாணிக்கவாசகர்.

தண்டைஎழில் கிண்கிணிசேர் சரண மலர்க்கு
அனுதினமும் தமியேன் அன்பாய்த்
தெண்டனிடச் செய்தருள்வாய் (4)

என வேண்டிக் கொள்கிறார். தெண்டனிடல் கீழே விழுந்து வணங்கல். அவன் திருவடி மலர் நம் தலையில் அமையுமாறு வணங்கல். பூவில் உயர்ந்தது தாமரை. அதனினும் உயர்ந்தது இறைவன் திருவடித்தாமரை. அதனைத் தலையில் சூடி மகிழ வேண்டும். வணங்கும் முறையோடு வணங்கவேண்டும்.

சொல்லிய முறையால் சொல்லவும் படுமே' - என வரும் தொல்காப்பிய நூற்பாவால் உணரலாம். ஆனால் பாலை நிலத்தைத் தனியாக ஒரு நிலமாகக் கொள்ளாமையால், பாலை நிலத்திற்கு உரிய தெய்வத்தையும் தொல்காப்பியர் குறிக்கவில்லை. ஆனால், தமிழ் நூல் மரபில் கொற்றவை (துர்க்கை) பாலை நிலத் தெய்வமாக அமைக்கப்பட்டுள்ளது.

ஆக, குறிஞ்சிக் கடவுள் முருகன் என்றால் மலை சார்ந்த இடம் குறிஞ்சிப்பாடி இல்லையே என்று ஆராயும் போதுதான் ஓர் உண்மை விளங்குகிறது.

தவத்திரு சுப்புராய சுவாமிகள் பழநியில் நெடுங்காலம் தங்கி அனுதினமும் பழநி தண்டபாணியைத் தரிசித்து, வந்த குடும்பத்தை மறந்தார். மனைவி மக்களைத் துறந்தார். அதனால், தம் மெய்யன்பரின் குடும்பம் குடும்பத்தலைவன் இன்றி அல்லாடுவதை அறிந்த முருகப்பெருமான் சுப்புராயரின் கனவில் தோன்றி, 'நீவிர் உம் சிங்கபுரிக்குச் செல்லுவீர்', அங்கு உம் ஊருக்கு அருகில் இருக்கும் மீனாட்சிப்பேட்டையில் ஒரு நெசவாளரின் கிணற்றடியில் பச்சைக்கல் ஒன்று இருக்கிறது. அதைக் கொண்டு வந்து என் உருவைச் செதுக்கி பிரதிஷ்டைச் செய்வீர். அவ்வுருவில் என் சக்தி இயங்கும் எனக் கூறி அருளினார்.

முருகனின் கூற்றுப்படி தவத்திரு சுப்புராயர் சொந்த ஊருக்குத் திரும்பி சிலை அமைத்து கோயிலை நிறுவினார் என்பது வரலாறு. இந்த வரலாற்றைத் தவத்திரு கோலசுவாமிகள் மூலம் அறிந்ததால்தான் தவத்திரு தண்டபாணி சுவாமிகள், 'குறிஞ்சிப்பாடி' என விழப்பள்ளம் (சிங்கபுரி), குப்பம் எனும் இரு கிராமங்களுக்கும் பொதுவான பெயராக வைத்திருக்கவேண்டும். காரணம் குறிஞ்சிநிலத் தலைவனான பழநி தண்டாயுதபாணி இங்கு வந்து, முகாமிட்டதால் (பாடி அமைத்ததால்) குறிஞ்சிப்பாடி என பெயர் பெற்றது எனத் தெள்ளத் தெளிவாகிறது.

- குறிஞ்சி வேலன்

முண்டகத்தாள் முறையில் தாழ்ந்து 5

என்றும் வேண்டினார் (முண்டகம் – தாமரை).

**அடியார் கழகம் கூட்டாய்**

மனிதன் சார்ந்தன் வண்ணம் ஆகக்கூடியவன். எனவே நாம் எப்போதும் சிற்றினம் சேராமல் பெரியாரைத் துணை கொள்ளவேண்டும். உலகியலுக்கும் இது உரியது. அருளியலுக்கும் இது உரியது. நாம் சிவனடியாரோடு சேர்ந்திருந்தால் நாம் கொண்ட சிவபக்தி நிலைக்கும். மேலும் வளர்ச்சி பெறும். எல்லா அருளாளர்களும் இதனை வலியுறுத்தினர்.

நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமும்

என்பார் தாயுமானவர்.

உடையாள் உன்தன் நடு இருக்கும் உடையாள் நடுவுள் நீ இருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் பொன்னம்பலத்துஎன்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்நின்றே

என வேண்டுவார் மாணிக்கவாசகர்.

துய்யநின் பாதத்தில் அன்பும் உதவிப் பெரிய
தொண்டரோடு கூட்டு கண்டாய்

என வேண்டுவார் அபிராமிபட்டர்.

நீக்குறும் மயலும் நிலைத்தபேர் அறிவும்
நின்திரு வடிமலர்க்கு அன்பு
காக்குறும் மனமும் உடையமெய்த் தொண்டர்
கணத்தினுள் எனைவிடுத்து அருளாய்

என வேண்டுவார் துறைமங்கலம் சிவப்பிரகாசர். அந்த வகையில் வள்ளலார் இங்கே,

கல்லாதேன் எனினும் எனை இகழாதே
நினது அடியார் கழகம் கூட்டாய் (3)

என வேண்டிக் கொள்கிறார். கல்லாமை – திருவருள் ஞான நூல் கல்லாமை, கழகம்–கூட்டம். நல்ல தமிழ்ச்சொல்.

சுவாமிகள், தவத்திரு கோல சுவாமிகள். இந்த நான்கு சித்தர்களும் நடமாடிய ஊருக்கெல்லாம் உயர்வான ஊர்தான் குறிஞ்சிப்பாடி.

இந்த வேளையில் விழல்பள்ளம் எனவும் குப்பம் எனவும் தனித்தனி கிராமங்களாக இருந்தவைகளை ஒருங்கிணைத்து குறிஞ்சிப்பாடி என வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அழைத்ததன் காரணம் என்ன என்று சிறிது அலசிப்பார்க்கும் போதுதான் அதற்கான உண்மை விளங்குகிறது.

பண்டைக்காலத் தமிழ்ப்பெருமக்கள் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு வகைகளாகப் பாகுபாடு செய்திருந்தார்கள். அதனால்தான் இவ்வுலகை நானிலம் என்றும் அழைக்கிறார்கள்.

மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி, காடும் காடு சார்ந்த இடமும் முல்லை, வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம், கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல். இவற்றைத் தவிர பாலை என்ற ஒரு பாகுபாடும் உண்டு. இது மணலும் மணல் சார்ந்த இடமுமாகிய வறண்ட நிலப்பகுதியாகும். இந்த பாலை நிலம் தமிழகத்தில் இல்லை.

'முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்து
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்' - எனச் சிலப்பதிகாரம் கூறுகிறது. இதையே தொல்காப்பியரும் பாலைத்திணையை நடுவுநிலைத்திணை எனும் பெயரால் குறித்துள்ளார்.

இந்த நிலப் பகுதிகளுக்கு உரிய தெய்வங்களையும் தமிழ்ச் சான்றோர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

'மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் உருவாக்கிய

# குறிஞ்சிப்பாடி

நஞ்சுறழ் சாரணர் நலிந்து மாய்வுறச்
செஞ்சுவைத் தமிழ்பகர் செல்வன் சேரும் ஊர்
மஞ்சுலாம் பொழிலினும் மகளிர் கையிலும்
கொஞ்சுபைங் கிளிமிகும் குறிஞ்சிப் பாடியே.

--வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.

பழந்தமிழ்நாட்டில் தென்னாற்காடு மாவட்டத்தில் கிழக்கே பாடலேஸ்வரர் அருள்பாலிக்கும் திருப்பாதிரிப்புலியூரும் தெற்கே ஆடல்வல்லான் திருநடனம்புரியும் சிதம்பரமும் மேற்கே விருத்தகிரீஸ்வரர் பாதுகாக்கும் திருமுதுகுன்றமும் வடக்கே அட்டவீரட்டத்தில் வீரட்டீஸ்வரர் ஆட்சிபுரியும் திருவதிகையும் எல்லைகளாகி, இந்த நான்கு ஊர்களுக்கும் நடுநாயகமாக விளங்கும் குறிஞ்சியம்பதி ஒரு காலத்தில் விழல்பள்ளம், (சிங்கபுரி) குப்பம் என இரு பகுதிகளாக இரு வேறு கிராமங்களாகத்தான் திகழ்ந்தன. இந்தக் குப்பம் பகுதியும் மூன்று தெருக்களுடன்-இன்றைய ஈஸ்வரன் கோயில் தெரு, வச்சாணிமுதலித்தெரு, எல்லைக்கல் தெரு என மூன்று தெருக்களில் வீரபாகுதேவர் பரம்பரையில் வந்த செங்குந்த குல மக்கள் வாழ்ந்தார்கள். இந்த மூன்று தெருக்களும் பழந்தெரு எனப்பட்டன.

இம்மக்களுக்கு வணங்கும் தெய்வமாக அருள்மிகு புத்துமாரியம்மன் இருந்தாள். பின்பு ஈஸ்வரன்கோயில் உருவாயிற்று. ஈஸ்வரன் கோயிலில் வள்ளி தெய்வானையுடன் முருகப் பெருமானுக்கு தனிச் சந்நிதியும், நடராஜப் பெருமானுக்குத் தனிச்சந்நிதியும் பிற்காலத்தில் அமைக்கப்பட்டன.

விழல்பள்ளம், குப்பம் என இரு பகுதிகளாக பிரிந்திருந்த இவ்வூரை 'குறிஞ்சிப்பாடி' என ஒருங்கிணைத்துப் பாடியவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எனும் சித்தர். இவரின் காலத்தவர்கள்தான் வள்ளல் இராமலிங்க அடிகள், தவத்திரு சுப்புராய

விண்ணவர்கோ னருந்துயர நீங்கிடவும்
மாதுதவ விளைவு நல்குங்
கண்ணகன்ற பேரருளின் கருணையினாற்
குஞ்சரியைக் காத லோடு
மண்ணுலகோர் முதலுயிர்கள் மகிழ்ந்திடவும்
மணம்புரிந்த வள்ள லேயென்
திண்ணியதீ வினையொழிப்பாய் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 9

மாசகன்ற சிவமுனிவர் அருளாலே
மானிடமாய் வந்த மாதின்
ஆசில்தவப் பேறளிக்க வள்ளிமலை
தனைச்சார்ந்தே அங்குக் கூடி
நேசமிகு மணம்புரிந்த நின்மலனே
சிறியேனை நீயே காப்பாய்
தேசுலவு பொழில்சூழஞ் சிங்கபுரி
தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 10

திருச்சிற்றம்பலம்.



இத்தலங்களில் சென்னை கந்தகோட்டம், திருத்தணிகை, சிங்கபுரி ஆகியவை முருகப்பெருமான் குடிகொண்ட திருத்தலங்களாகும். சென்னை ஏழுகிணறு துலுக்கானத்தம்மன் கோயிற்கொண்டுள்ள திருத்தலம். திருவொற்றியூர், திருவலிதாயம், திருமுல்லைவாயில், புள்ளிருக்கு வேளூர், திருவாரூர், திருவண்ணாமலை, திருமுதுகுன்றம், திருவதிகை, திருத்தில்லை ஆகியவை சிவபெருமான் வீற்று அருள் செய்யும் திருத்தலங்களாகும். திருஎவ்வளூர், திருக்கண்ணமங்கை ஆகியவை திருமால் கோயில் கொண்டுள்ள திருத்தலங்கள்.

சென்னை கந்தகோட்டம், திருத்தணிகை, சென்னை ஏழுகிணறு, திருவொற்றியூர், திருவலிதாயம், திருஎவ்வளூர், திருகண்ணமங்கை ஆகிய தலங்கள் தம் இளம் வயதில் சென்னையிலிருந்த காலையில் இராமலிங்கரால் வழிபடப்பட்டவை. பிற்காலத்தில் பெருமானார் கருங்குழியில் வசித்தபோது வழிபட்டவையே மற்ற தலங்கள்.

வள்ளற்பெருமான் முருகன் மேல் இளம்வயது தொட்டே மிகுந்த பக்தி கொண்டவர். அந்த வடிவேலனின் அருளினாலேயே அவன் உபாசனையால் கலைஞானம் அனைத்தும் ஓதாதுணர்ந்தனர். பெருமானார் முதன் முதலில் வழிபட்ட தலமே முருகத் தலமாகிய சென்னை கந்தகோட்டமாகும். பின்னரே சிவத்தலமாகிய திருவொற்றியூரை வழிபட்டார். சென்னையில் வாழ்ந்த காலத்தில் திருத்தணிகையையும், கருங்குழியில் வசித்த காலத்தில் சிங்கபுரியையும் வழிபட்டுத் திருப்பதிகங்கள் பாடியருளினார்.

திரு.ச.மு.கந்தசாமி பிள்ளையவர்கள் இயற்றியருளிய இராமலிங்க சுவாமிகள் சரித்திர குறிப்புகள் என்னும் நூலில், அடிகளார்முருகப்பெருமான் மேல்கொண்ட பக்தியையும் அவனருளால் பெற்ற பேற்றையும் கூறுகிறார். அப்பகுதியை அப்படியே தருகிறோம்.

சபாபதிபிள்ளை தன் தம்பி இராமலிங்க பிள்ளைக்கு ஐந்தாம் பிராயத்தில் வித்தியாப்பியாசம் செய்வித்தனர். பிறகு சில காலம்

வைத்தியநாதசுவாமி தனிக்கோயிலின் வடக்குச்சுவரின் வெளிப்புறம் அர்த்தநாரீஸ்வரர், கிழக்குச்சுவரின் வெளிப்புறம் ஸ்ரீஅண்ணாமலையார், தெற்குச்சுவரின் வெளிப்புறம் ரிஷிகளுடன் கூடிய ஸ்ரீதட்சிணாமூர்த்தி ஆகிய கடவுளரின் திருவுருவச் சிற்பங்கள் மிக அற்புதமாகக் காணப்படுகின்றன.

## நாள்வழிபாடும் விழாக்களும்

செவ்வாய்க்கிழமைதோறும் கோயிலில் மிகச்சிறப்பான வழிபாடுகளும், பூசைகளும் நடைபெறுகின்றன. கந்தர் சஷ்டி ஒருவார உற்சவமாகக் கொண்டாடப்படுகிறது. பங்குனி உத்திரமும் சிறப்பான திருவிழா.

இக்கோயிலுள்ள ஸ்ரீதுர்க்கை அம்மனுக்கு வெள்ளிக்கிழமை தோறும் இராகு காலத்தில் மிகச்சிறப்பான பூஜை வழிபாடு நடைபெற்று வருகிறது.

வாலாம்பிகை அம்மைக்கு பத்து நாட்கள் திருவிழாவாக ஆடிப்பூரம் பிரமோற்சவம் கொண்டாடப்படுகிறது.

## பூசையரின் தனிச்சிறப்பு

கோயிலுக்குப்பூசை செய்யும் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் அனைவருமே நாள்தோறும் கோயிலுக்கு உணவு படைத்து பூசை செய்த பின்பே உணவு கொள்கின்றனர்.

## செப்பு விக்கிரகங்கள்

வள்ளலார், பாலமுருகன், சண்டிகேஸ்வரர், நடராஜர், நால்வர், விநாயகர், வள்ளிதெய்வானை சமேத சண்முகர், சோமாஸ்கந்தர், தனி அம்மன், பாலாம்பிகை, சந்திரசேகரர், பிட்சாடனர், பிரதோஷ நாயகர், பழனியாண்டவர், சுப்பராய சுவாமிகள், உத்திராபதீஸ்வரர், துர்க்கை, அஷ்டதேவர், வீரபாகு தேவர், அருணகிரிநாதர், வள்ளி தெய்வானை

புண்தருநோய் என்பதால் உடலில் கட்டியும் புண்ணும் ஏற்பட்டிருக்கலாம்.

பிணி தீர்க்க வேண்டும் என சில பாடல்களில் வெளிப்படையாக வேண்டிடும் வள்ளலார் சில பாடல்களில் குறிப்பாகவும் கூறுகின்றார்.

நலிவு தீர்ப்பாய் (2)

பிணியால் வருவது உடல்நலிவு. பிணி நீங்கின் மீண்டும் பொலிவு பெறும்.

திண்ணிய தீவினை ஒழிப்பாய் (9)

நாம் முற்பிறவியில் செய்த தீவினையே இப்பிறப்பில் நமக்குத் துன்பமாக – நோயாக வருகின்றன.

பற்றித்தொடரும் இருவினை புண்ணிய பாவங்களே

என்றார் பட்டினத்தார். தீவினை உறுதியாக நம்மைப் பற்றித் தொடரும். திருவருளால் மட்டுமே நீக்கிட முடியும்.

புண்தந்து வருத்தும் இந்நோய் தணிக்கத் தடையாக இருப்பது யான் செய்த தீவினைதானோ என்பார்.

புண்தரு நோய் தணிக்கப் புரையிலியோய்
யான் செய்யும் புன்மை தானோ? (4)

என வேண்டினார்.

தணிக்கத் தடையாக இருப்பது என ஒரு தொடரைக் கொண்டு வந்து சேர்த்துப் பொருள் கொள்ளவேண்டும்.

என்னதான் நம் தீவினையின் விளைவாக இருந்தாலும் இறைவன் திருவுளம் பற்றின் ஒரு நொடியில் நீங்கிவிடும். எனவே

எனது பிணி நீ நினைந்தால் ஒரு கணத்தில் மாறிடாதோ (3)

என வேண்டினார்.

சிறியேனை நீயோ காப்பாய் (10)

என இறுதியில் வேண்டினார். நோயினின்றும் பிற துன்பங்களினின்றும் காத்தருள வேண்டினார். நீயே என ஏகாரம் தந்து உன்னைத்தவிர என்னைக் காத்தருள ஒருவரும் இல்லை என உறுதியாக உரைத்தருளினார்.

எழுந்தருளி பூதத்தை மாய்த்து, நக்கீரரையும் பிறரையும் விடுதலை செய்தார். இதனை,

பண்டுறு சங்கப் புலவர் அருஞ்சிறையைத்
தவிர்த்தருளும் பகவனே (4)

என வள்ளலார் குறிப்பிடுகின்றார். நக்கீரர் தமிழ்ச்சங்கத்தின் தலைமைப்புலவர்.

நக்கீரர் தொடங்கி இன்றுவரை முருகனைப் பாடியோர் பலர். அனைவரினும் அருணகிரிநாதர் குறிப்பிடத்தக்கவர். திருஅண்ணாமலையில் தோன்றி, இளமையில் நெறிமாறி வாழ்ந்து, மனம் நொந்து, கோயில் கோபுரம் ஏறி கீழே விழுந்து இறக்க முற்பட்டபோது முருகன் தோன்றி அவரைத் தாங்கி அருள் செய்து முத்து முத்தாகப் பாடுமாறு அருளினார். முத்தைத் தரு எனத் தொடங்கிப் பல்லாயிரம் திருப்புகழ் பாடி அவர் முருகனைப் போற்றினார். இதனை,

முன்செய்த மாதவத்தால் அருணகிரிநாதர்
முன்னே முறையிட்டு ஏத்தும்
புன்செயல் தீர் திருப்புகழை ஏற்றருளும்
மெய்ஞ்ஞான புனிதன் (8)

என்று வள்ளலார் குறிப்பிடுகின்றார். திருப்புகழ், படிப்பவர்களின் புன்செயலை-சிறுமையைத் தீர்த்திடும்.

திருமுருகனிடம் பக்தி செய்து அருள்பெற்ற அடியவர் சிலரின் வரலாற்றைச் சொல்லும் நூல் சேய்த்தொண்டர் புராணம். இதனைப் பாடியவர் தேனூர் வரகவி சொக்கலிங்கனார். இது திருமுருகனின் பன்னிரு திருமுறைகளுள் 12ஆம் திருமுறையாக விளங்குவது. சைவத்தில் 12ஆம் திருமுறையாக விளங்கும்திருத்தொண்டர் (பெரிய) புராணத்தை ஒத்தது இந்நூல். சேய்த்தொண்டர் புராணத்தில் சொல்லப்பெறும் ஒரு வைசியப் பெண்ணின் வரலாற்றை வள்ளலார் இங்குக் குறிப்பிடுகின்றார்.

வணிகர் குலப்பெண் ஒருத்தி திருமுருக பக்தை. நல்ல பண்பினர். அவர் எப்போதும் முருகா முருகா என ஓதிக் கொண்டே

# குறிஞ்சிப்பாடி திருப்பதிகம்

தவத்திரு கோலசுவாமிகளின் வேண்டுகோளுக்கு இணங்க ஆடல் வல்லானின் அருளாசியுடன் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் குறிஞ்சிப்பாடி முருகப்பெருமான் மீது பற்றுகொண்டு இயற்றி அருளிய குறிஞ்சிப்பாடி திருப்பதிகம்

**காப்பு வெண்பா**

கொற்றிபுகழ் வைவேல் குமர குருநாதன்
பற்றிமகிழ் தென்குறிஞ்சிப் பாடிக்கு- வெற்றிமிகு
தண்தமிழால் ஓர்பதிகம் சாற்றத் தமியேன்உள்
கொண்டதணை கோழிக் கொடி.

**நூல் (கலி விருத்தம்)**

என்றும்நல் இளமை உற்று இருவர் தோள்புணர்
நன்றுடைக் குருபர நாதன் வாழும்ஊர்
செற்றுவான் மகளிரைச் சேரல் வேண்டியும்
கொன்றுஉணார் பெருகிய குறிஞ்சிப் பாடியே. 1

சூர்த்தகண்ப் பேய்உயிர் தொலைத்துக் கீரனை
நீர்த்தடம் தோய்த்துஅருள் நிமலன் நீடும்ஊர்
சீர்த்தநூல் பயன்லாம் தெளியும் பேறுடைக்
கூர்த்தநெஞ் சினர்உறும் குறிஞ்சிப் பாடியே. 2

வெயிலுடைப் பரிதியும் வெள்கும் வீறுசேர்
அயிலுடன் தோகைமீது அமரும் ஆதிஊர்
தயிலவார் குழலியர் தயங்க மாமிசை
குயில்இனம் பயிலுறும் குறிஞ்சிப் பாடியே. 3

பற்றுலர் குலம்அறப் பறிக்கும் போர்வலி
உற்றவர் தொழும்குகன் உறையும் ஒப்புஇல்ஊர்
நற்றவர் நாவலர் நாடல் நல்குசீர்க்
கொற்றவர் அனையர்வாழ் குறிஞ்சிப் பாடியே. 4

ஆறொடு தும்பையும் அரவும் கொன்றையும்
நீறொடு புனைதரும் நிமலன் மைந்தன்ஊர்
சேறோடு கமலமும் தினையும் செம்மணிக்
கூறொடு நிலவிய குறிஞ்சிப் பாடியே. 5

என்பன.

ஏவர்தம்பாலும் இன்றி எல்லைதீர் அமலற்குள்ள
மூவிரு குணனும் சேய்க்கு முகங்களாய் வந்தது.

– கந்தபுராணம்.

வள்ளல் (9) அவன் பன்னிரு தடந்தோள் வள்ளல். பன்னிரு கைகளாலும் வாரி வழங்குபவன். அவன் வள்ளல், அவன் மனைவி வள்ளி.

**நிறைவு**

இப்படிப் பல்வேறுவகையிலும் சிந்திக்க வைப்பதாகவும், சிறப்புடையாதாகவும் விளங்குகிறது இத்திருப்பதிகம்.

வள்ளற்பெருமான் அண்ணாருக்கென்று பாடியது எனினும் நாம் அனைவரும் தோத்திரம் செய்ய ஏற்றதாகவும் அமைந்துள்ளது. குறிப்பாக நமக்கு நோய், பிணி வந்தால் தோத்திரம் செய்து திருவருளால் நீக்கிக் கொள்ளக்கூடியதாக அமைந்துள்ளது. பொதுவாகவும் துன்பம் தீரப் பாராயணம் செய்யலாம்.

வள்ளலார் இளமையில் கந்தகோட்ட முருகனைப் பாடினார். திருத்தணிகை முருகனைக் கண்ணாடியில் கண்டு பின் நிரம்பப் பாடினார். திருஒற்றியூர் முருகனையும், புள்ளிருக்கு வேளூர் முருகனையும் பாடிப் போற்றியுள்ளார். அந்த வரிசையில் சிங்கபுரிக் கந்தனையும் பாடிப் போற்றியுள்ளார். வள்ளலாரால் பாடப் பெற்ற தலமாகச் சிங்கபுரி அமைந்தது. நாமும் பாடிப் பயன் பெறலாம்.



தவத்திரு சுப்புராய சுவாமிகள்

பகைவர்) வலி அடக்கும் சிங்கபுரி (3) எனவும் மக்களைக் குறிக்கின்றார்.

மக்கள் கணவனும் மனைவியுமாகச் சேர்ந்து தினமும் திருக்கோயில் சென்று வழிபட வேண்டும் என்பதை

எழிலின் மிக்க வாராரும் கொங்கையர்கள்
மணவாளர் உடன் கூடி வாழ்த்த நாளும் (1)

எனக் குறிப்பிடுகிறார். நாளும் வாழ்த்த எனப் பொருள் கொள்ள வேண்டும்.

**கந்தபுராணச் செய்திகள்**

திருமுருகன் அவதாரம் தொடங்கி, வள்ளித்திருமணம் வரை பல செய்திகளும் பதிகத்தில் சொல்லப்பட்டுள்ளன.

உம்பர்துயர் கயிலைஅரர்க்(கு) ஓதிடவே
அப்பொழுதே உவந்து நாதன்
தம்பொருஇல் முகம் ஆறு கொண்டுநுதல்
ஈன்றபொறி சரவ ணத்தில்
நம்பும் அவர்உயவிடுத்து வந்(து) அருளும்
நம்குகனே நலிவு தீர்ப்பாய் (2)

என்பது திருமுருகன் அவதாரச் செய்தி.

தேவர்கள் கயிலை சென்று சிவபெருமானிடத்தில் சூரபதுமனால் தாங்கள் படும் துயரங்களைத் திரும்ப திரும்ப முறையிட்டனர். உடனே சிவபெருமான் சத்யோசாதம், வாமதேவம், தத்புருஷம், ஈசானம், அகோரம் எனும் ஐந்து முகங்களோடு கீழ்நோக்கிய அதோமுகம் எனும் ஆறாம் முகத்தையும் வெளிப்படுத்தி,ஆறு நெற்றிக் கண்களிலிருந்தும் தீப்பொறியை வெளிப்படுத்தி, வாயு மற்றும் அக்னி தேவர்களால் எடுத்துக் கொண்டு போய் சரவணப் பொய்கையில் விடச் செய்தார். தன் அவதாரத்தை விரும்பும் அவர்கள் உய்ந்திட நம் குகப் பெருமான் அவதாரம் செய்தருளினான்.

இங்கு உயவிடுத்து வந்து அருளும் என்பதை உவந்து

அருளும் எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பது ஓர் மேனியாகக்
கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய

என்பது கச்சியப்பர் அருளிய கந்தபுராணப் பாடல்.

முருகனாகிய குழந்தை பாதாளத்திலுள்ள பாம்புகளைப் பிடித்து எண் திசைகளில் உள்ள மலைகளில் கட்டித் தேர் போல இழுத்தார். ஆனால் எந்த உயிருக்கும் எந்த தீங்கும் இல்லை. இவ்வாறு விளையாடுவதை இந்திரன் பார்த்தான். அவன் முருகன் என்று அறியவில்லை. அசுரன் என நினைத்துப் போரிட முற்பட்டான். அவன் வச்சிராயுதம் பொடியாயிற்று. அவன் யானை ஐராவதம் மூர்ச்சித்தது. தேவகுரு வியாழன் ஓடி வந்து அவனுக்கு உண்மை உணர்த்தி, முருகனிடம் தேவேந்திரன் சார்பாக மன்னிப்பு வேண்டினார். இதனை,

வானவர்கோன் மேல்நாளில் தரமறியாது
இகழந்திட விரைவில் சென்று
மானமதில் வீற்றிருந்தே அவன்
புரிந்த கொடுமைதனை மாற்றும் சண்முகனே (6)

எனக்குறிப்பிடுகின்றார். (மானம்-விமானம்)

முருகன் வீரவாகு தேவர் முதலாம் நவ வீரர்கள் மற்றும் பூதகணங்களோடு சென்று சூரபதுமனோடு தம்பி சிங்கமுகன் தாரகன் பானுகோபன் முதலான மகன்கள் மற்றும் அசுர குலத்தை அழித்தருளினான். இதனை,

பொல்லாத சூர்க்கிளையைத்தடிந்து அமரர்
படுந்துயரப் புன்மை நீக்கும் வல்லானே (3)
தானவர்தம் குலம் அடர்த்த சண்முகனே (6)
ஒட்டாதார் வலி அடக்கி (7)

என்றெல்லாம் குறிப்பிடுகின்றார்.

மீண்டும் வாழ்வு பெற்ற இந்திரன் தமது நன்றிக் கடனாகத்

ஞானத்தின் உண்மை வடிவம். வள்ளலாரின் குரு திருஞானசம்பந்தர். திருமுருகனே, திருஞானசம்பந்தராக அவதரித்தார் என்பது வள்ளலாரின் கருத்து. இதனை அருட்பாவில் பல இடங்களில் பதிவு செய்துள்ளார். பொதுவாக விநாயகர் மீது காப்பு பாடுவார்கள். இங்கு வள்ளலார் தம் குருநாதர், விநாயகர் இருவர் மீதும் காப்பு பாடுகின்றார்.

**பதிக மகுடம்**

பதிகத்தில் ஒவ்வொரு பாடலின் முடிவும் ஒரே தொடராக அமைந்தால் அதை மகுடம் என்பர். இப்பதிகத்தில் "சிங்கபுரி தனில் அமர்ந்த தெய்வக் குன்றே" என்பது மகுடமாக அமைந்துள்ளது. திருமுருகன் மலை தெய்வம். குறிஞ்சிக் கிழவன் எனப் போற்றுவர். அவனே ஒரு குன்று போல் அமைந்த தெய்வமாக விளங்குகிறான் என்கிறார் வள்ளலார்.

**சிங்கபுரி வளம்**

குபேரனது நகர் அளகாபுரியும், இந்திரனது நகர்அமராவதியும், சிங்கபுரியின் வளத்தைக் கண்டு வெட்கப்படுகின்றனவாம். மேலும்

தேராரும் நெடுவீதி (1)

திங்கள் தவழ் மதில் சூழும் சிங்கபுரி (2)

வாசத் தேனவிழும் பொழில் சூழும் சிங்கபுரி (6)

தேசுலவு பொழில் சூழும் சிங்கபுரி (10)

இப்படி நகரின் வளத்தை சுட்டுகின்றார் வள்ளலார். நீர்வளமும் நில வளமும் மிக்குப் பொருள் வளம் நிறைந்துள்ளது. எனவே தான் பொன் மகள் வாழ் சிங்கபுரி எனக் காப்புப் பாடலில் குறிப்பிட்டார்.

**மக்கள் நலம்**

மேலும் மக்கள் மறை ஒழுக்கம் தவிராது, நான்மரபு சிறக்க வாழும் (1) நிலையைக் காட்டுகின்றார். (நல்வழி) செல்லாதார் (ஆகிய

# சிங்கபுரிக் கந்தர் பதிகம்
## சில செய்திகள்

புலவர் வ.ஞானப்பிரகாசம், கடலூர்.

**பதிகம் பாடப்பட்ட காரணம்**

வள்ளற்பெருமான் வடலூரை அடுத்த கருங்குழியில் தங்கியிருந்த காலம் 1858முதல் 1867 வரை 9 ஆண்டுகள் ஆகும். இக்காலத்தில் அவருடைய மூத்த தமையனார் சபாபதி பிள்ளை அவரைக் காண கருங்குழி வந்துள்ளார். அப்போது அவர் ஏதோ நோய் வாய்ப்பட்டுள்ளார். அது நீங்கிட வேண்டி வள்ளலார் அவருக்காகப் பாடிக் கொடுத்தருளிய பதிகம் இதுவாகும்.

இஃது ரக்தாக்ஷி வருடம் சித்திரை மாதம் 26ஆம் தேதி சுக்கிரவாரம், கார்த்திகை நக்ஷத்திரம் சோதரர் சபாபதி பிள்ளையின் ரோக நிவாரணத்தம் சி.இராமலிங்க பிள்ளை அவர்களால் இயற்றியது என நோட்டுப் பிரதியில் குறிப்பு இருந்ததாகத் திருவருட்பா பதிப்பாசிரியர் திரு. ஆ. பாலகிருஷ்ணபிள்ளை குறிப்பிடுகின்றார். இதில் குறிப்பிட்டுள்ள நாள் ஆங்கிலக் கணக்குப்படி 6.5.1964 என்றும் அவர் குறித்துள்ளார் (சுக்கிர வாரம்-வெள்ளிக்கிழமை)

கார்த்திகை திருமுருகன் வழிபாட்டுக்குரிய நாள் என்பதால் வள்ளற்பெருமான் தம் அண்ணாரோடு இத்திருக்கோவில் வந்து வழிபட்டுப் பாடித் தந்திருக்கலாம். அண்ணாருக்கு என்னநோய் என்று தெரியவில்லை.

பதிகப் பாடல்களிலும் நோய் என்றும் பிணி என்றும் பொதுவாகவே குறிப்பிடப் பெற்றுள்ளது.

புண்தரு இந்நோய் - தணி (4)
எனது பிணி நீ நினைத்தால் ஒரு கணத்தில் மாறிடாதோ (3)
தீவாய் இப்பிணி தொலைப்பாய் (5)
இப்பிணியைத் தணிப்பாய் (6)
என்பன நோயை நீக்கியருள வேண்டும் விண்ணப்பங்கள்.

## எங்கும் நிறைந்த முருகன்

திருமுருகன் எங்கும் நிறைந்துள்ளான். அவனைச் சிறப்பாக ஆறு தலங்களில் வணங்குகிறோம்.

ஆறு திருப்பதி கண்டு ஆறெழுத்து அன்பினுடன்

கூறுமவர் சிந்தை குடி கொண்டோனே.

என்பார் குமரகுருபரர்.

மட்டாரும் பொழில்சேரும் பரங்கிரி செந்தூர் பழனி மருவுசாமி (7)

என முதல் மூன்று தலங்களைச் சுட்டி, பின் திருவேரகம், குன்று தோறாடல், பழமுதிர்சோலை என்னும் தலங்களையும் நினைக்க வைத்தார் வள்ளலார். மேலும்

நட்டாரும் பணிபுரியும் ஆறுதலை மலை முதலாய் நணுகி (7)

மலை முதலாய் – மலை முதலாக எல்லா இடங்களிலும். ஆறுதலை – ஆற்றோரங்களிலும், எல்லாத் தலங்களிலும் அன்பர்கள் எல்லோரும் அன்புற்றுத் திருப்பணி செய்கிறார்களாம். (நட்டு ஆரும் – ஆரும் நட்டு – யாவரும் அன்புற்று)

சிறப்பாக அன்பர்கள் சென்று வணங்கும் அந்தத் தலங்களில் உள்ள இறைவன்தான் சிங்கபுரியிலும் எழுந்தருளியுள்ளான் என்பதை மனம் கொள்ள வைக்கிறார்.

## இறைவனைக் குறிக்கும் பெயர்கள்

திருமுருகன் ஞானமே வடிவானவன். ஞான பண்டிதன். எனவே போதன் (காப்பு) என்றார். போதம் – ஞானம்.மெய்ஞ்ஞான புனிதன் (8) என்றார். நின்மலர் (10) மலம் இல்லாதவன் – தூயவன் என்றார். அவன் தானும் மலமற்றுத் தன்னைச் சார்ந்தாரையும் மலமற்றவர் ஆக்குபவன். தேவாதி தேவன் (5) அனைத்துத் தேவர்களாலும் வணங்கப் பெறுபவன். ஒருவ (7) ஒப்பற்றவனே. அவன் தனக்குவமை இல்லாதவன். அவன் சண்முகம் (6). ஐம்முகச் சிவமே ஆறுமுகம் கொண்டு வந்தான். பகவன் (4) அவன் ஆதிபகவன். பகம் – 6. ஆறுகுணங்களை உடையவன். அவை 1. ஞானம் 2. ஐசுவரியம் 3. சக்தி 4. பலம் 5.வீரியம். 6. தேஜஸ்

வெளிப்பிரகாரத்தில் கொடிக்கம்பத்தின் வடக்கும், தெற்குமாகக் கிழக்கு நோக்கியபடி ஸ்ரீஆறுமுக சுவாமி கோயிலும், விநாயகர் கோயிலும் அமைந்துள்ளன. மூலஸ்தானத்தின் வடக்குச் சுவரின் வெளிப்புறத்தில் நால்வர் மாடக்கோயில் வடக்குப்பார்த்து அமைந்துள்ளது. இம் மாடக் கோயிலிலேயே குருதேவர் சுப்பராயரின் திருவுருவச் சிலையொன்றும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. நால்வர் மாடக்கோயிலின் எதிரே சிவகாமி சமேதரான நடராஜரும், அவருக்கு முன் ஸ்ரீரத்தினசபாபதியும் கூடிய தெற்கு நோக்கிய கோயில் அமைந்துள்ளது. இச்சிறு கோயிலின் கண்ணாடி மாடப்புரையில் நடராஜர், சிவகாமசுந்தரி, இராமலிங்க சுவாமிகள், சுப்புராய சுவாமி ஆகியோர் திருவுருவச் சுதைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இக்கோயிலின் வெளிப்புற மதிலின் உட்புறம் வடமேற்கு மூலையில் சுவாமிக்கென பள்ளியறை ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

மூலஸ்தானத்தின் வடக்கு வெளிப்புறச்சுவரையடுத்து தனிக்கோயிலில் மகிஷாசுரமர்த்தினி, ஸ்ரீதுர்க்காதேவியாக விளங்குகின்றாள். துர்க்கை கோயிலை ஒட்டி, கிழக்கில் தனியே தெற்குப் பார்த்த சிறு கோயிலினுள் ஸ்ரீசண்டிகேஸ்வரர் விளங்குகின்றார்.

கோயிலின் கிழக்கு சுற்றுச்சுவர் மதிலினுள் அமைந்த மாடப்புரைகளில் மேற்கு பார்த்தபடி சந்திரன், சூரியன், பைரவர் ஆகிய கடவுளரின் திருவுருவங்கள் அமைந்துள்ளன. இம்மாடப்புரைகளுக்குத் தெற்கில் யாகசாலையும் அதனையொட்டி மூலஸ்தானத்திற்கு நேர் பின்புறம் நவகிரகக்கோயில் தனியாகவும் அமைந்துள்ளது.

மூலஸ்தானத்தின் வடக்குச் சுவரின் வெளிப்புறத்தில் பிரம்மாவின் சிற்பமும், அதற்கு மேல் சத்திபுத்தியுடன் கூடிய விநாயகர் சிற்பமும் காணப்படுகின்றன. கிழக்குச்சுவரின் வெளிப்புறத்தில் மகாவிஷ்ணு சிற்பமும், அதற்கு மேல் தண்டபாணி கடவுள் சிற்பமும் விளங்குகின்றன. தெற்குச் சுவரின் வெளிப்புறத்தில் குருதேவர் சுப்பராயர் சுவாமிகளின் திருவுருவமும், அதற்குமேல் ரிஷிகளுடன் கூடிய ஸ்ரீதட்சிணாமூர்த்தி சிற்பமும் அமைந்துள்ளன.

அண்டரும் முனிவரும் அறியொ ணாநலம்
தொண்டருக்கு அருள்குகன் துலங்கும் தூயஊர்
விண்தலம் தடவிய மேடை தோறும்நல
கொண்டல்வந்து அமர்தரு குறிஞ்சிப் பாடியே. 6

பேயில்நேர் கொடுவினைப் பிணக்கம் தீர்த்து அருள்
தாயில்வந்து ஆள்குகன் தங்கத் தக்கஊர்
வாயிலால் பரிதியும் மதியும் போய்வரும்
கோயிலின் சிறப்புஉறும் குறிஞ்சிப் பாடியே. 7

நஞ்சுஉறழ் சாரணர் நலிந்து மாய்வுறச்
செஞ்சுவைத் தமிழ்பகர் செல்வன் சேரும்ஊர்
மஞ்சுஉலாம் பொழிலினும் மகளிர் கையினும்
கொஞ்சுபைங் கிளிமிகும் குறிஞ்சிப் பாடியே. 8

காசிபன் தரவரும் கரிய சூரன்மேல்
வீசிய வேல்புனைவிகிர்தன் மேவும் ஊர்
ஆசிகூ றிடும்அவர்க்கு அள்ளி நல்கிடக்
கூசிடார் வதிதரும் குறிஞ்சிப் பாடியே. 9

மூவரும் கைதொழும் முருகன் முத்தமிழ்க்
காவலன் வழிபடும் கடவுள் காக்கும்ஊர்
சேவல்அம் புள்ளோடு சிறுபு றாஇனம்
கூவலால் சிறந்து ஒளிர் குறிஞ்சிப் பாடியே. 10

பரவுவார் மனம் எனப் படிவம் கொண்டருள்
சரவணக் குருபரத் தலைவன் தங்கும்ஊர்
மரவொடு செருந்தியும் மாவும் வாழையும்
குரவமும் தழைதரு குறிஞ்சிப் பாடியே. 11

நூற் பயன்

நீடிய வளம்உறும் நெல்லை யூரவன்
கூடிய தவன்வரும் குறிஞ்சிப் பாடியைக்
கேடில்சீர்க் குகனொடு கிளத்தல் ஓதுவார்
தேடிய நலம்எலாம் சேர்வது உண்மையே.

திருச்சிற்றம்பலம்

புறப்பட்டுச் சென்று அருகில் உள்ள தலங்களையெல்லாம் தொழுது போற்றி வருவார். சிங்கபுரிக்கும் அவர் அடிக்கடி சென்று தொழுது வருவது வழக்கம். ஒரு சமயம் இராமலிங்க அடிகளாரின் சோதரர் சபாபதி பிள்ளையின் நோய் தீரவேண்டி, சிங்கபுரி சென்று கந்தவேல் மேல் கந்தர் திருப்பதிகம் பாடியருளினார்.

இப்பதிகம், முருகவேள் திருப்பாசுரங்கள் என்னும் தலைப்பின் கீழ் தனிப்பாசுரப் பகுதியில் திரு.ஆ.பாலகிருஷ்ணபிள்ளை பதிப்பில் காணப்படுகிறது.

மேலும் இப்பதிக வரலாறு பின் குறித்தபடி ஓர் நோட்டுப் பிரதியில் காணப்படுகிறது. இஃது ரக்தாக்ஷி வருடம் சித்திரை மாதம் உசு சுக்கிர வாரம் கார்த்திகை நக்ஷத்திரம் சகோதரர் சபாபதி பிள்ளையின் ரோக நிவாரணார்த்தம் சி.இராமலிங்கபிள்ளையவர்களாலியற்றியது என்றும், 1892 - ஆம் ஆண்டு அருட்பாப் பதிப்பில் இது முதல் முதல் வெளிவந்தபோது, குறிஞ்சிப்பாடிக்கு அடுத்துள்ள சிங்கபுரிக் கந்தர் பதிகம் என்ற தலைப்போடு அச்சிடப்பட்டிருக்கிறது என்றும், மேற்படி சித்திரை மாதம் உசு க்குச் சரியான ஆங்கில நாள் 6-5-1864 என்றும் இப்பதிகம் பற்றி திருஅருட்பாவின் அடிக்குறிப்புச் சொல்கிறது.

இனி, சிங்கபுரிவாழ் சிங்காரவேலர் மீது வள்ளலார் பாடியருளிய கந்தர் திருப்பதிகத்தைக் கீழே தருகிறோம். நாள்தோறும் பாடிக்கந்தர் அருள் பெறுவீராக.





நமது திருக்கோயில்
குருமூர்த்த சுப்புராயர் சுவாமிகளின்
ஜீவசமாதி வழிபாட்டில்
கும்பாபிஷேகச் சக்ரவர்த்தி



நமது திருக்கோயிலில்
சுப்ராயர் சுவாமிகளின்
பிறந்தநாள் விழாவில்
தமது பேரப்பிள்ளைகளின்
தேவார பண்ணிசை
அரங்கேற்றம்



ஜெயங்கொண்டம்
செல்வி மெடிக்கல்ஸ்
இல்ல பவளவிழாவில்
தம் குழுவினர்களுடன்
செந்தமிழ்
வேள்விச்சதுரர்



1986 – ல் நமது திருக்கோயிலில் திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளின் சொற்பொழிவின் தொடக்கவுரை



987 – ல் சோழமண்டலத்தில் முதல் தமிழ் திருக்குடமுழுக்கு விழாவில் திருப்பனந்தாள் குருமகா சந்நிதானத்துடன் வேள்விசதுரர்.